உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# கண்ணப்ப நாயனார் புராணம்

[உரையுடன்]




உரையாசிரியர்

சிவக்கவிமணி

C. K. சுப்பிரமணிய முதலியார், B. A, அவர்கள்


விலை ரூ. 6.

கோவைத் தமிழ்ச்சங்க வெளியீடு - 13.

உ

சிவமயம்

# கண்ணப்பநாயனார்புராணம்

## (உரையுடனும் படங்களுடனும்)

திருக்காளத்தித்தேவாரப்பதிகங்கள் - பன்னிருதிருமுறைத்திரட்டு -
சரித்திர ஆராய்ச்சிக்குறிப்புக்கள் அடங்கியது

பதிப்பாசிரியர்
கோவை, வழக்கறிஞர்
**திரு. C. K. சுப்பிரமணிய முதலியார்,** B. A.

**கோயமுத்தூர் - T. மார நாய்க்கர்**
உயில்சாசன தருமநிதியின் உதவி கொண்டு வெளியிடப்பட்டது

சாது அச்சுக்கூடம்
இராயப்பேட்டை—சென்னை

---

கோவைத்தமிழ்ச்சங்கம்
கோயமுத்தூர்

23—9—1939

உரிமை பதிப்பாசிரியர்க்கே விலை ரூபா [illegible]

# கண்ணப்பநாயனார் புராணம்

(உரையுடன்)



" தத்தையாந் தாய் ;தந்தை நாகனாந் ; தன்பிறப்புப்
போத்தப்பி நாட்டுடுப்பூர் வேடுவனாந் ;—தித்திக்குந்
திண்ணப்ப னாஞ்சிறுபேர் ; செய்தவத்தாற் காளத்திக்
கண்ணப்ப னாய்நின்றான் காண் "

—நக்கீரர் - பதினொராந்திருமுறை.

“ பொருட்பற்றிச் செய்கின்ற பூசனைகள் போல்விளங்கச்
செருப்புற்ற சீரடி வாய்க்கலச மூனமுதம்
விருப்புற்று வேடனார் சேடறிய மெய்குளிர்ந்தங்
கருட்பெற்று நின்றவா தோணோக்க மாடாமோ ”

“ கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை கண்டபின்
என்னப்ப னென்னொப்பி லென்னையுமாட் கொண்டருளி
வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணைச்
சுண்ணப்பொன் னீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ ”

—*திருவாசகம்.*

“ கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை யென்றமையாற்
கண்ணப்ப னொப்பதோ ரன்பதனைக்—கண்ணப்பர்
தாமறிதல் காளத்தி யாரறித லல்லதுமற்
றுூரறியு மன்பன் றது”

—(52) *திருக்களிற்றுப்படியார்.*

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# முன்னுரை

கண்ணப்பநாயனார் புராணம்

"வேடாதி பதியுடுப்பூர் வேந்த னாகன்
விளங்கியசேய் திண்ணனார் கன்னி வேட்டைக்
காடதில்வாய் மஞ்சனமுங் குஞ்சிதரு மலருங்
காய்ச்சினமென் றிடுதசையுங் காளத்தி யார்க்குத்
தேடருமன் பினிலாறு தினத்தளவு மளிப்பச்
சீறுசிவ கோசரியுந் தெளியவிழிப் புண்ணீ
ரோடவொரு கண்ணப்பி யொருகண் ணப்ப
வொழிகவெனு மருள்கொடரு குறகின் றாரே"

—திருத்தொண்டர் புராணசாரம் 12

பெரியபுராணஉரை வெளியீட்டில் தொடர்ச்சியாய்க் கண்ணப்ப நாயனார் புராணம் உரை வெளியிடும்போது கண்ணப்ப நாயனார் புராணத்தை மட்டும் உரையுடன் தனிப்புத்தகமாக ஒரு பதிப்பு வெளியிடலாமென்ற எண்ணம் தோன்றிற்று. கண்ணப்ப நாயனார் மரபில் வந்து, சில காலத்திற்கு முன் கோயமுத்தூரில் வாழ்ந்திருந்து, சிவ தருமங்களுக்காகத் தமது பொருள்களை வைத்துப் புகழெய்திய T. மாரநாய்க்கரது உயில்சாசனத் தருமபரிபாலகர்கள் இதற்குப் பொருளுதவி செய்ய முற்பட்டதே எனது எண்ணம் உருப்படுதற்கு உரிய காரணமாயிருந்தது. அவர்களது பொருளுதவித்துணையுங்கொண்டு இத்தனிப்பதிப்பு வெளியிடப்பெற்றது. அவர்களுக்கு எனது நன்றி உரியது. எனது பெரியபுராண உரை வெளியீட்டைப் பெற்று வாசிக்க இயலாதவர்களாய்க் கண்ணப்பர் சரிதத்தை வாசிக்க விரும்புவோர் இதனை எளிதிற் பெற்று வாசித்துப் பயனடையலாம். அதுபற்றியே இதற்கு எளிய விலையாகிய இரண்டு ரூபா விலை வைக்கப்பட்டுள்ளது. கல்விச் சங்கங்கள், மடங்கள், இலவசப் புத்தகசாலைகள், கலாசாலைத் தலைமையாசிரியர்களிடம் கையொப்பம் வாங்கி அனுப்பும் மாணவர்கள் ஆகிய இவர்களுக்கு $1\frac{1}{2}$ ரூபா விலைக்குக் கொடுக்கப்படும். திருக்காளத்தியையும் திருக்கண்ணப்பரையும்பற்றிய சைவத் தெய்வப் பன்னிருதிருமுறைத்திரட்டும், திருக்காளத்தித் தேவாரப் பதிகங்களும் இதிற் சேர்க்கப்பட்டுள்ளன. பின்சேர்க்கையாக உள்ள சரித்திரக் குறிப்புக்களும், பெயர் விளக்கமும் வாசிப்போர்க்கு உதவி செய்வனவாம். பல அரிய செய்திகளை விளக்கும் படங்களும் இதிற் சேர்க்கப்பட்டுள்ளன. சிவப்பிரகாசர் - வேலையர் - கருணைச் சிவப்பிரகாசர் இம்மூவர்களுமியற்றிய சீகாளத்திப் புராணத்திலும், ஆனந்தக்கூத்தர் இயற்றிய திருக்காளத்திப் புராணத்திலும் கண்ணப்பநாயனார் சரிதம் பேசப்பட்டுள்ளது. இந்த இரண்டு தலபுராணங்களினின்றும் துதிகளாகிய பாடற்றிரட்டும் இதன் இறுதியிற் சேர்க்கப்பட்டுள்ளது.

சேக்கிழார் நிலையம்
கோயமுத்தூர்
23—9—1939

C. K. சுப்பிரமணிய முதலியார்,
பதிப்பாசிரியன்.

# பொருளடக்கம்


| | | | பக்கம் |
|---|---|---|---|
| 1. | திருக்காளத்தித் தேவாரப் பதிகங்கள் | ... | 1—6 |
| 2. | காளத்தியையும் கண்ணப்பரையும் பற்றிய சைவத் தெய்வப் பன்னிரு திருமுறைத்திரட்டு | ... | 7—20 |
| 3. | **கண்ணப்ப நாயனூர் புராணம் உரையுடன்** | ... | ௧—௨௨௬ |
| 4. | அநுபந்தம் (இடைச்செருகல்கள்) | ... | ௨௨௭—௨௨௮ |
| 5. | சரிதச் சுருக்கம் | ... | ௨௨௮—௨௩௭ |
| 6. | கற்பனை (1) உலகினியல் | ... | ௨௩௭—௨௩௮ |
| | ,, (2) அன்பினியல் | ... | ௨௩௮—௨௪௦ |
| 7. | சரித்திர ஆராய்ச்சிக் குறிப்புக்கள் | ... | ௨௪௧—௨௪௭ |
| 8. | பிழை திருத்தம் | ... | ௨௪௮—௨௪௯ |
| 9. | பாட்டு முதற்குறிப்பு | ... | ௨௫௦—௨௫௧ |
| 10. | பெயர் விளக்கம் | ... | ௨௫௨—௨௫௭ |
| 11. | தலபுராணத்திரட்டு (துதிகள்) | ... | ௨௫௮ |


# படங்களின் விவரம்


| | | | பாட்டு | பக்கம் |
|---|---|---|---|---|
| 1. | சிலந்தி - பாம்பு - யானை—ஸ்ரீகாளத்தி | ... | 1 | ௫ |
| 2. | திருக்காளத்தித் திருமலையும் திருக்கோயிலும் பொன் முகலியாறும் | ... | 100 | ௧௧௭ |
| 3. | பெருந்தலையூர் (கோவைச் சில்லா) கோயிலும், அருச்சுனர் - கண்ணப்பர் ஒருசேரக்காணும் திருவுருவங்களும் | ... | 102 | ௧௨௦ |
| 4. | பொன் முகலியிலிருந்து கண்ணப்பர் திருமலை ஏறிச் சென்ற படிகள் | ... | 103 | ௧௨௦ |
| 5. | **திருக்காளத்திக் கண்ணப்பர் திருவுருவம்** | ... | 180 | ௨௨௬ |
| 6. | காளத்தித் திருக்கோயில் - ஐந்து கோபுரங்கள் (மலை மேலிருந்து பார்வை) | ... | | |
| 7. | அன்னியர் படை எடுப்பின்போது காளத்திநாதர் திருவுருவமாக அமைக்கப்பட்ட திருவுருவம் | ... | | |

உ
சிவமயம்

# திருக்காளத்தித் தேவாரத் திருப்பதிகங்கள்

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

மூன்றாந் திருமுறை — பண் - சாதாரி - திருவிராகம்

திருச்சிற்றம்பலம்

**வா**னவர்க டானவர்கள் வாதைபட வந்ததொரு மாகடல்விடந்
தானமுது செய்தருள் புரிந்தசிவன் மேவுமலை தன்னைவினவில்
ஏனமிள மானினொடு கிள்ளைதினை கொள்ளவெழி லார்கவணினால்
கானவர்த மாமகளிர் கனகமணி விலகுகா ளத்திமலையே. க

முதுசினவி லவுணர்புர மூன்றுமொரு நொடிவரையின் மூளவெரிசெய்
சதுரர்மதி பொதிசடையர் சங்கரர் விரும்புமலை தன்னைவினவில்
எதிரெதிர வெதிர்பிணைய வெழுபொறிகள் சிதறவெழி லேனமுழுதக்
கதிர்மணியின் வளரொளிகொ ளிருளகல நிலவுகா ளத்திமலையே. உ

வல்லைவரு காளியை வகுத்துவலி யாகிமிகு தாருகனைநீ
கொல்லென விடுத்தருள் புரிந்தசிவன் மேவுமலை கூறிவினவிற்
பல்பல விருங்கனி பருங்கிமிக வுண்டவை நெருங்கியினமாய்க்
கல்லதிர நின்றுகரு மந்திவிளை யாடுகா ளத்திமலையே. ங

வேயனைய தோளுமையோர் பாகமது வாகவிடை யேறிசடைமேற்
றூயமதி சூடிசுடு காடினட மாடிமலை தன்னைவினவில்
வாய்கலச மாகவழி பாடுசெயும் வேடன்மல ராகுநயனங்
காய்கணையி னாலிடந் தீசனடி கூடுகா ளத்திமலையே. ச

மலையின்மிசை தனின்முகில்போல் வருவதொரு மதகரியை மழைபோலலறக்
கொலைசெய்துமை யஞ்சவுரி போர்த்தசிவன் மேவுமலை கூறிவினவில்
அலைகொள்புன லருவிபல சுனைகள்வழி யிழியவயி னிலவுமுதுவேய்
கலகலென வொளிகொள்கதிர் முத்தமவை சிந்துகா ளத்திமலையே. ரு

பாரதம் விளங்கிய பகீரத னருந்தவ முயன்றபணிகண்
டாரருள் புரிந்தலைகொள் கங்கைசடை யேற்றவரன் மலையைவினவில்
வாரத ரிருங்குறவர் சேவலின் மடுத்தவ ரெரித்தவிறகிற்
காரகி லிரும்புகை விசும்புகமழ் கின்றகா ளத்திமலையே. சு

ஆருமெதி ராதவலி யாகியச லந்தரனை யாழியதனால்
ஈரும்வகை செய்தருள் புரிந்தவ னிருந்தமலை தன்னைவினவில்
ஊருமர வம்மொளிகொண் மாமணி யுமிழ்ந்தவை யுலாவிவரலாற்
காரிருள் கடிந்துகன கம்மென விளங்குகா ளத்திமலையே. எ

எரியனைய சுரியமயி ரிராவணனை யீடழிய வெழில்கொள்விரலாற்
பெரியவரை யூன்றியருள் செய்தசிவன் மேவுமலை பெற்றிவினவில்
வரியசிலை வேடுவர்க ளாடவர்க ணீடுவரை யூடுவரலாற்
கரியினொடு வரியுழுவை யரியினமும் வெருவுகா ளத்திமலையே. அ

இனதளவி லிவனதடி யிணையுமுடி யறிதுமென விகலுமிருவர்
தனதுருவ மறிவரிய சகலசிவன் மேவுமலை தன்னைவினவிற்

புனவர்புன மயிலனைய மாதரொடு மைந்தரு மணம்புணருநாட்
கனகமென மலர்களணி வேங்கைக ணிலாவுகா ளத்திமலையே. ௯

நின்றுகவ ளம்பலகொள் கையரொடு மெய்யிலிடு போர்வையவரு
நன்றியறி யாதவகை நின்றசிவன் மேவுமலை நாடிவினவிற்
குன்றின்மலி துன்றுபொழி னின்றுகுளிர் சந்தின்முறி தின்றுகுலவிக்
கன்றினொடு சென்றுபிடி நின்றுவிளை யாடுகா ளத்திமலையே. ௧0

காடதிட மாகநட மாடுசிவன் மேவுகா ளத்திமலையை
மாடமொடு மாளிகைக ணீடுவளர் கொச்சைவய மன்னுதலைவன்
நாடுமலி நீடுபுகழ் ஞானசம் பந்தனுரை நல்லதமிழின்
பாடலொடு பாடுமிசை வல்லவர்க ணல்லர்பர லோகமெளிதே. ௧௧

திருச்சிற்றம்பலம்

[இத்திருப்பதிகம் திருக்காளத்தி தரிசிக்க வரும்போது அருளப்பட்டது.]

---

மூன்றாந் திருமுறை

பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

சந்தமா ரகிலொடு சாதிதேக் கம்மரம்
உந்துமா முகலியின் கரையினி லுமையொடும்
மந்தமார் பொழில்வளர் மல்குவண் காளத்தி
எந்தையா ரிணையடி யென்மனத் துள்ளவே. ௧

ஆலமா மரவமோ டமைந்தசீர்ச் சந்தனம்
சாலமா பீலியுஞ் சண்பக முந்தியே
காலமார் முகலிவந் தணைதரு காளத்தி
நீலமார் கண்டனை நினையுமா நினைவதே. ௨

கோங்கமே குரவமே கொன்றையம் பாதிரி
மூங்கில்வந் தணைதரு முகலியின் கரையினி
லோங்கமர் காளத்தி யடிகளை யடிதொழ
வீங்குவெந் துயர்கெடும் வீடெளி தாகுமே. ௩

கரும்புதேன் கட்டியுங் கதலியின் கனிகளும்
அரும்புநீர் முகலியின் கரையினி லணிமதி
யொருங்குவார் சடையினன் காளத்தி யொருவனை
விரும்புவா ரவர்கடாம் விண்ணுல காள்வரே. ௪

வரைதரு மகிலொடு மாமுத்த முந்தியே
திரைதரு முகலியின் கரையினிற் றேமலர்
விரைதரு சடைமுடிக் காளத்தி விண்ணவ
னிரைதரு கழலிணை நித்தலு நினைமினே. ௫, ௬, ௭

முத்துமா மணிகளு முழுமலர்த் திரள்களு
மெத்துமா முகலியின் கரையினி லெழில்பெறக்
கத்திட வரக்கனைக் கால்விர லூன்றிய
வத்தன்றன் காளத்தி யணைவது கருமமே. ௮

மண்ணுமா வேங்கையும் மருதுகள் பீழ்ந்துந்தி
நண்ணுமா முகலியின் கரையினி னன்மைசேர்

வண்ணமா மலரயன் மாலவன் காண்கிலா
வண்ணலார் காளத்தி யாங்கணெந் தையயே. ௯

வீங்கிய வுடலினர் விரிதரு துவருடைப்
பாங்கிலார் சொலைவிடும் பரனடி பணியுமின்
ஓங்குவண் காளத்தி யுள்ளமோ டுணர்தர
வாங்கிடும் வினைகளை வானவர்க் கொருவனே. ௧0

அட்டமா சித்திக ளணைதரு காளத்தி
வட்டவார் சடையனை வயலணி காழியான்
சிட்டநான் மறைவல ஞானசம் பந்தன்சொல்
இட்டமாப் பாடுவார்க் கில்லையாம் பாவமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

[இத்திருப்பதிகம் திருக்காளத்தி தரிசித்துப் புறப்படும்போது அருளப்பட்டது.]

---

## திருநாவுக்கரசு நாயனார்

ஆறாந்திருமுறை — பண் - திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

விற்றூணொன் றில்லாத நல்கூர்ந் தான்காண்
வியன்கச்சிக் கம்பன்காண் பிச்சை யல்லான்
மற்றூணொன் றில்லாத மாசது ரன்காண்
மயானத்து மைந்தன்காண் மாசொன் றில்லாப்
பொற்றூண்காண் மாமணிநற் குன்றொப் பான்காண்
பொய்யாத பொழிலேழுந் தாங்கி நின்ற
கற்றூண்காண் காளத்தி காணப் பட்ட
கணநாதன் காணவனென் கண்ணு ளானே. ௧

இடிப்பான்கா ணென்வினையை யேகம் பன்கா
ணெலும்பா பரணன்கா ணெல்லா முன்னே
முடிப்பான்காண் மூவுலகு மாயி னான்காண்
முறைமையா லெம்புரியும் வழுவா வண்ணம்
படித்தான் றலையறுத்த பாசுப தன்காண்
பராய்த்துறையான் பழனம்பைஞ் ஞீலி யான்காண்
கடித்தார் கமழ்கொன்றைக் கண்ணி யான்காண்
காளத்தியா னவனென் கண்ணு ளானே. ௨

நாரணன்கா ணான்முகன்கா ணால்வே தன்காண்
ஞானப் பெருங்கடற்கோர் நாவா யன்ன
பூரணன்காண் புண்ணியன்காண் புராணன் றான்காண்
புரிசடைமேற் புனலேற்ற புனிதன் றான்காண்
சாரணன்காண் சந்திரன்காண் கதிரோன் றான்காண்
தன்மைகட் டானேகாண் டக்கோர்க் கெல்லாங்
காரணன்காண் காளத்தி காணப் பட்ட
கணநாதன் காணவனென் கண்ணு ளானே. ௩

செற்றான்கா ணென்வினையைத் தீயா டிகாண்
டிருவொற்றி யூரான்காண் சிந்தை செய்வார்க்
குற்றான்கா ணேகம்ப மேவி னான்கா
ணுமையாணற் கொழுநன்கா ணிமையோ ரேத்துஞ்
சொற்றான்காண் சோற்றுத் துறையு ளான்காண்
சுறாவேந்த னேவலத்தை நீறா நோக்கக்
கற்றான்காண் காளத்தி காணப் பட்ட
**கணநாதன்** காணவனென் கண்ணுளானே. ௪

மனத்தகத்தான் றலைமேலான் வாக்கி னுள்ளான்
வாயாரத் தன்னடியே பாடுந் தொண்டர்
இனத்தகத்தா னிமையவர்தஞ் சிரத்தின் மேலான்
ஏழண்டத் தப்பாலா னிப்பாற் செம்பொன்
புனத்தகத்தா னறுங்கொன்றைப் போதி னுள்ளான்
பொருப்பிடையா னெருப்பிடையான் காற்றி னுள்ளான்
கனத்தகத்தான் கயிலாயத் துச்சி யுள்ளான்
காளத்தி யானவனென் கண்ணு ளானே. ௫

எல்லாமுன் றோன்றாமே தோன்றி னான்காண்
ஏகம்ப மேயான்கா ணிமையோ ரேத்தப்
பொல்லாப் புலனைந்தும் போக்கி னான்காண்
புரிசடைமேற் பாய்கங்கை பூரித் தான்காண்
நல்லவிடை மேற்கொண்டு நாகம் பூண்டு
நளிசிரமொன் றேந்தியோர் நாணா யற்ற
கல்லாடை மேற்கொண்ட காபா லிகாண்
காளத்தியா னவனென் கண்ணு ளானே. ௬

கரியுருவு கண்டத்தெங் கண்ணு ளான்காண்
கண்டன்காண் வண்டுண்ட கொன்றை யான்காண்
எரிபவள வண்ணன்கா ணேகம் பன்கா
ணெண்டிசையுந் தானாய குணத்தி னான்காண்
திரிபுரங்கள் தீயிட்ட தீயா டிகாண்
தீவினைகள் தீர்த்திடுமென் சிந்தை யான்காண்
கரியுரிவை போர்த்துகந்த காபா லிகாண்
காளத்தியா னவனென் கண்ணு ளானே. ௭

இல்லாடிச் சில்பலிசென் றேற்கின் றான்கா
ணிமையவர்க டொழுதிறைஞ்ச விருக்கின் றான்காண்
வில்லாடி வேடனா யோடி னான்காண்
வெண்ணூலுஞ் சேர்ந்த வகலத் தான்காண்
மல்லாடு திரடோண்மேன் மழுவா ளன்காண்
மலைமகடன் மணாளன்காண் மகிழ்ந்து முன்னாட்
கல்லாலின் கீழிருந்த காபா லிகாண்
காளத்தியா னவனென் கண்ணு ளானே. ௮

தேனப்பூ வண்டுண்ட கொன்றை யான்காண்
திருவேகம் பத்தான்காண் டேனூர்ந் துக்க
ஞானப்பூங் கோதையாள் பாகத் தான்கா
ணம்பன்காண் ஞானத் தொளியா னன்காண்
வானப்பே ரூரு மறிய வோடி
மட்டித்து நின்றான்காண் வண்டார் சோலைக்
கானப்பே ரூரான்காண் கறைக்கண் டன்காண்
காளத்தியா னவனென் கண்ணு ளானே. கூ

இறையவன்கா ணேழுலகு மாயி னன்கா
ணேழ்கடலுஞ் சூழ்மலையு மாயி னன்காண்
குறையுடையார் குற்றேவல் கொள்வான் றான்காண்
குடமூக்கிற் கீழ்க்கோட்ட மேவி னன்காண்
மறையுடைய வானோர் பெருமான் றான்காண்
மறைக்காட் டுறையு மணிகண் டன்காண்
கறையுடைய கண்டத்தெங் காபா லிகாண்
காளத்தி யானவனென் கண்ணு ளானே. க0

உண்ணா வருநஞ்ச முண்டான் றான்கா
ணூழித்தீ யன்னான்கா ணுகப்பார் காணப்
பண்ணாரப் பல்லியம் பாடி னன்காண்
பயின்றநால் வேதத்தின் பண்பி னன்காண்
அண்ணா மலையான்கா ணடியா ரீட்ட
மடியிணை தொழுதேத்த வருளு வான்காண்
கண்ணாரக் காண்பார்க்கோர் காட்சி யான்காண்
காளத்தி யானவனென் கண்ணு ளானே. கக

திருச்சிற்றம்பலம்

(கணநாதன் - என்பது சுவாமி பெயர். 9-ம் திருப்பாட்டில் இத்தலத்து அம்மையார் பெயர் போற்றப்படுதல் காண்க.)

---

## சுந்தரமூர்த்திநாயனார்

ஏழாந்திருமுறை பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

செண்டா டும்விடையாய் சிவனேயென் செழுஞ்சுடரே
வண்டா ருங்குழலா ளுமைபாக மகிழ்ந்தவனே
கண்டார் காதலிக்குங் கணநாதனெங் காளத்தியா
யண்டா வுன்னையல்லா லறிந்தேத்த மாட்டேனே. க

இமையோர் நாயகனே யிறைவாவென் னிடர்த்துணையே
கமையார் கருணையினாய் கருமாமுகில் போன்மிடற்றாய்
உமையோர் கூறுடையா யுருவேதிருக் காளத்தியு
ளமைவே யுன்னையல்லா லறிந்தேத்த மாட்டேனே. உ

படையார் வெண்மழுவாய் பகலோன்பல் லுகுத்தவனே
விடையார் வேதியனே விளங்குங்குழைக் காதுடையாய்

கடையார் மாளிகைசூழ் கணநாதனெங் காளத்தியா
யுடையா யுன்னையல்லா லுகந்தேத்த மாட்டேனே. ௩

மறிசேர் கையினனே மதமாவுரி போர்த்தவனே
குறியே யென்னுடைய குருவேயுன் குற்றேவல் செய்வேன்
நெறியே நின்றடியார் நினைக்குந்திருக் காளத்தியுள்
அறிவே யுன்னை யல்லா லறிந்தேத்த மாட்டேனே. ௪

செஞ்சே லன்னகண்ணார் திறத்தேகிடந் தற்றலறி
நஞ்சே னடியேனலமொன் றறி யாமையினாற்
றஞ்சே னொருகாற் றொழுதேன்றிருக் காளத்தியாய்
அஞ்சா துன்னையல்லா லறிந்தேத்த மாட்டேனே. ௫

பொய்யவ னுயடியேன் புகவேநெறி யொன் றறியேன்
*செய்யவ னுகியேவந் திடரானவை தீர்த்தவனே
மெய்யவ னேதிருவே விளங்குந்திருக் காளத்தியென்
ஐயநுன் னையல்லா லறிந்தேத்த மாட்டேன். ௬

கடியேன் காதன்மையாற் கழற்போதறி யாதவென்னுள்
குடியாக் கோயில்கொண்ட குளிர்வார்சடை யெங்குழகா
முடியால் வானவர்கள் முயங்குந்திருக் காளத்தியாய்
அடியே னுன்னையல்லா லறியேன்மற் றொருவரையே. ௭

நீருர் மேனியனே நிமலா நினை யன்றி மற்றுக்
கூறே னுவதனாற் கொழுந்தேயென் குணக்கடலே
பாரூர் வெண்டலையிற் பலிகொண்டுழல் காளத்தியா
யேறே யுன்னையல்லா லினியேத்த மாட்டேனே. ௮

தளிர்போல் மெல்லடியாள் தனையாகத் தமர்ந்தருளி
யெளிவாய்வந் தென்னுள்ளம் புகுதவல்ல வெம்பெருமான்
களியார் வண்டறையுந் திருக்காளத்தி யுள்ளிருந்த
**வொளியே** யுன்னையல்லா லினியொன் று முணரேனே. ௯

காரா ரும்பொழில்சூழ் கணநாதனெங் காளத்தியுள்
ஆரா வின்னமுதை யணிநாவலா ரூரன் சொன்ன
சீரூர் செந்தமிழ்கள் செப்புவார்வினை யாயினபோய்ப்
பேரா விண்ணுலகம் பெறுவார்பிழைப் பொன்றிலரே. ௧௦

திருச்சிற்றம்பலம்

(முதற்பாசுரத்திற் சுவாமி பெயர் - அம்மையார் பெயர் - போற்றப்படுதல் காண்க)

---

தேவார முதலிய சைவத்தெய்வப்பன்னிரு திருமுறைகளிற் காளத்தி - கண்ணப்பர் - துதிகள் வரும் சில திருப்பாட்டுக்கள் இதன்கீழ்த் திரட்டப்பட்டுள்ளன.

---

***செய்யவனுகி வந்திங்கிட**—என்பதும் பாடம்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

காளத்தியையும் கண்ணப்பரையும் பற்றிய

# சைவத் தெய்வப் பன்னிருதிருமுறைத் திரட்டு

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

இரண்டாந் திருமுறை திருக்ஷேத்திரக் கோவை பண் - இந்தளம்

*அண்ணாமலை யீங்கோயு மத்தி முத்தா றகலா முதுகுன்றங் கொடுங்குன்றமும்*
*கண்ணார் கழுக்குன்றங் **கயிலை** கோணம் பயில்கற்குடி **காளத்தி** வாட்போக்கியும்*
*பண்ணார் மொழிமங்கையோர் பங்குடையான் பாரங்குன்றம் பருப்பதம் பேணிநின்றே*
*எண்ணா யிரவும் பகலும் இடும்பைக்கடல் நீந்தலாங் காரணமே.*

மூன்றாந்திருமுறை கூடற்சதுக்கம் - பண் - பழம்பஞ்சுரம்

*கண்ண னு நான்முகன் காண்பரி யார்*
*வெண்ணாவல் விரும்பு மயேந்தி ரருங்*
***கண்ணப்பர்க் கருள்செய்த கயிலை** யெங்க*
*ளண்ண லாரூராதி யானைக் காவே.*

மூன்றாந்திருமுறை தென்குடித்திட்டை பண் - கொல்லி

**கானலைக் கும்மவன் கண்ணிடந் தப்பநீள்**
**வானலைக் குந்தவத் தேவுவைத் தானிடந்**
*தானலைத் தெள்ளமூர் தாமரைத் தண்டுறை*
*தேனலைக் கும்வயற் றென்குடித் திட்டையே.*

---

## திருநாவுக்கரசுநாயனார்

நான்காந் திருமுறை திருச்சாய்க்காடு திருநேரிசை

*குவப்பெருந் தடக்கை வேடன் கொடுஞ்சிலை யிறைச்சிப் பாரந்*
*துவர்ப்பெருஞ் செருப்பா னீக்கித் தூயவாய்க் கலச மாட்ட*
*வுவப்பெருங் குருதி சோர வொருகணை யிடந்தங் கப்பத்*
*தவப்பெருந் தேவு செய்தார் சாய்க்காடு மேவி னாரே.* அ

### திருக்குறுக்கை வீரட்டம்

*காப்பதோர் வில்லு மம்புங் கையதோ ரிறைச்சிப் பாரந்*
*தோற்பெருஞ் செருப்புத் தொட்டுத் தூயவாய்க் கலச மாட்டித்*
*தீப்பெருங் கண்கள் செய்ய குருதிநீ ரொழுகத் தன்கண்*
*கோப்பதும் பற்றிக் கொண்டார் குறுக்கைவீ ரட்ட னாரே.* எ

ஆறாந்திருமுறை திருவதிகைவீரட்டானம் காப்புத்திருத்தாண்டகம்

*திருநீர்ப் புனற்கெடில வீரட் டமும் திருவளப்பூர் தெற்கேறு சித்த வடம்*
*வருநீர் வளம்பெருகு மாகிரு பமும் மயிலாப்பில் மன்னினார் மன்னி யேத்தும்*

பெருநீர் வளர்சடையான் பேணி நின்ற பிரம புரஞ்சுழியல் பெண்ணு கடம்
கருநீல வண்டரற்றுங் காளத் தியுங் கயிலாயந் தம்முடைய காப்புக் களே. கஉ

க்ஷேத்திரக்கோவை திருத்தாண்டகம்

தில்லைச்சிற் றம்பலமும் செம்பொன் பள்ளி தேவன் குடிசிராப் பள்ளி தெங்கூர்
கொல்லிக் குளிரறைப் பள்ளி கோவல் வீரட்டங் கோகரணங் கோடி காவும்
முல்லைப் புறவம் முருகன் பூண்டி முளையூர் பழையாறை சத்தி முற்றம்
கல்லிற் றிகழ்சீரார் காளத் தியுங் கயிலாய நாதனையே காண லாமே. க

திருஅடைவு திருத்தாண்டகம்

கந்தமா தனங்கயிலை மலைகே தாரங் காளத்தி கழுக்குன்றங் கண்ணு ரண்ணு
மந்தமாம் பொழிற்சாரல் வடபர்ப் பதம் மகேந்திரமா மலைநீலம் ஏம கூடம்
விந்தமா மலைவேதஞ் சைய மிக்க வியன்பொதியின் மலைமேரு வுதயம் மத்தம்
இந்துசே கரனுறையும் மலைகள் மற்றும் ஏத்துவோ மிடர்கெடநின் றேத்து வோமே. கூ

திருமழபாடி

ஆலால முண்டுகந்த வாதி கண்டா யடையலர்தம் புரமூன்று மெய்தான் கண்டாய்
காலாலக் காலனையுங் காய்ந்தான் கண்டாய் கண்ணப்பர்க் கருள்செய்த காளை கண்டாய்
பாலாரு மொழிமடவாள் பாகன் கண்டாய் பசுவேறிப் பலிதிரியும் பண்பன் கண்டாய்
மாலாலு மறிவரிய மைந்தன் கண்டாய் மழபாடி மன்னு மணாளன் றானே. கூ

திருச்சிவபுரம்

வானவன்காண் வானவர்க்கு மேலா னான்காண்
வடமொழியுந் தென்றமிழு மறைக ணான்கு
மானவன்கா ணானைந்து மாடி னான்கா
ணையன்காண் கையிலன லேந்தி யாடுங்
கானவன்காண் கானவனுக் கருள்செய் தான்காண்
கருதுவா ரிதயத்துக் கமலத் தூறுந்
தேனவன்காண் சென்றடையாச் செல்வன் றான்காண்
சிவனவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன் றானே. க

தனித்திருத்தாண்டகம்

ஆமயந்தீர்த் தடியேனை யாளாக் கொண்டார்
அதிகைவீ ரட்டான மாட்சி கொண்டார்
தாமரையோன் சிரமரிந்து கையிற் கொண்டார்
தலையதனிற் பலிகொண்டார் நிறைவாந் தன்மை
வாமனனார் மாகாயத் துதிரங் கொண்டார்
மானிடங்கொண் டார்வலங்கை மழுவாள் கொண்டார்
காமனையு முடல்கொண்டார் கண்ணு னேக்கிக்
கண்ணப்பர் பணியுங்கொள் கபாலி யாரே. க

திருக்கழிப்பாலை

விண்ணப்ப விச்சா தரர்க ளேத்த விரிகதிரா னெரிசுடரான் விண்ணு மாகிப்
பண்ணப்பன் பத்தர் மனத்து ளேயும் பசுபதி பாசுபதன் றேச மூர்த்தி
கண்ணப்பன் கண்ணப்பக் கண்டு வந்தார் கழிப்பாலை மேய கபாலப் பனார்
வண்ணப் பிணிமாய யாக்கை நீங்க வழிவைத்தார்க் கவ்வழியே போது நாமே. கூ

## சுந்தரமூர்த்தி நாயனார்

ஏழாந்திருமுறை பண் - கொல்லிக்கௌவாணம்

### திருத்தொண்டத்தொகை

இலைமலிந்த வேனம்பி யெறிபத்தர்க் கடியேன்
ஏனாதி நாதன்றன் னடியார்க்கு மடியேன்
**கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்க் கடியேன்**
கடவூரிற் கலயன்ற னடியார்க்கு மடியேன்
மலைமலிந்த தோள்வள்ளன் மானக்கஞ் சாறன்
எஞ்சாத வாட்டாய னடியார்க்கு மடியேன்
அலைமலிந்த புனன்மங்கை யானயர்க் கடியே
னாரூ ரனாரூரி லம்மானுக் காளே. உ

பண் - தக்கேசி

### திருப்புன்கூர்

நற்றமிழ் வல்ல ஞானசம் பந்தன் நாவினுக் கரைய னாளைப்போ வானுங்
கற்ற சூதனற் சாக்கியன் சிலந்தி **கண்ணப் பன்**கணம் புல்லனென் றிவர்கள்
குற்றஞ் செய்யினுங் குணமெனக் கருதுங் கொள்கை கண்டுநின் குரைகழ லடைந்தேன்
பொற்றி ரண்மணிக் கமலங்கண் மலரும் பொய்கை சூழ்திருப் புன்கூரு ளானே. எ

### திருநின்றியூர்

அணிகொ ளாடையம் பூணணி மாலை யமுது செய்தமு தம்பெறு சண்டி
யிணைகொ ளேழெழு நூறிரும் பனுவ லீன்ற வன்றிரு நாவினுக் கரையன்
**கனைகோள் கண்ணப்ப** னென்றிவர் பெற்ற காத லின்னரு ளாதரித் தடைந்தேன்
றிணைகொள் செந்தமிழ் பைங்கிளி தெரியுஞ் செல்வத் தென்றிரு நின்றியூ ரானே.

பண் - சீகாமரம்

### திருவீழிமிழலை

எறிந்த சண்டி **யிடந்த கண்ணப்ப** னேத்து பத்தர்கட் கேற்ற நல்கினீர்
செறிந்த பூம்பொழிற்றென் றுளிவீசுந் திருமிழலை
நிறைந்த வந்தணர் நித்த நாடொறு நேசத் தாலுமைப் பூசிக் கும்மிடம்
அறிந்து வீழிகொண்டீர் அடியேற்கு மருளுதிரே. சு

---

## மாணிக்கவாசக சுவாமிகள்

எட்டாந்திருமுறை திருவாசகம்

**கண்ணப்ப** னொப்பதோ ரன்பின்மை கண்டபின்
என்னப்ப னென்னொப்பி லென்னையுமாட் கொண்டருளி
வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணைச்
சுண்ணப்பொன் னீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ.

பொருட்பற்றிச் செய்கின்ற பூசனைகள் போல்விளங்கச்
செருப்புற்ற சீரடி வாய்க்கலச மூனமுதம்
விருப்புற்று வேடனார் சேடறிய மெய்குளிர்ந்தங்
கருட்பெற்று நின்றவா தோணேக்க மாடாமோ,

# பூந்துருத்தி நம்பிகாடநம்பி

ஒன்பதாந்திருமுறை — திருவிசைப்பா

கோயில் — பண் - சாளரபாணி

கடியார் கணம்புல்லர் **கண்ணப்ப ரென்**றுன்
அடியா ரமருலக மாளநீ யாளாதே
முடியாமுத் தீவேள்வி மூவா யிரவரொடுங்
குடிவாழ்க்கை கொண்டுநீ குலாவிக்கூத் தாடினையே.

---

# திருமூலர்

பத்தாந்திருமுறை — திருமந்திரம்

அன்புஞ் சிவமு மிரண்டென்ப ரறிவிலார்
**அன்பே சிவமாவ தியாரு மறிகிலார்**
அன்பே சிவமாவ தியாரு மறிந்தபின்
**அன்பே சிவமா யமர்ந்திருப் பாரே.**

---

# நக்கீரதேவர்

பதினோராந்திருமுறை — கைலைபாதி காளத்திபாதியந்தாதி

பிறப்புடையர் கற்றோர் பெருஞ்செல்வர் மற்றுஞ்
சிறப்புடைய ரானாலுஞ் சீசீ—யிறப்பில்
கடியார் நறுஞ்சோலைக் காளத்தி யாள்வா
ரடியாரைப் பேணா தவர். 10

வைத்த விருந்தியே ! யென்னுடைய வாழ்முதலே !
வித்திலமே ! காளத்தி நீள்சுடரே !—மெய்த்தொளிசேர்
அக்காலத் தாசை யடிநாயேன் காணுங்கால்
எக்காலத் தெப்பிறவி யான். 54

வாமான்றேர் வல்ல வயப்போர் விசயனைப்போற்
றூமா ருலகிற் றவமுடையார்—தாமார்க்குஞ்
சாண்டற் கரியராய்க் காளத்தி யாள்வாரைத்
தீண்டத்தாம் பெற்றமையாற் சென்று. 70

அறியாம லேனு மறிந்தேனுஞ் செய்து
செறிகின்ற தீவினைக ளெல்லாம்—நெறிநின்று
நன்முகில்சேர் காளத்தி நாத னடிபணிந்து
பொன்முகரி யாடுதலும் போம். 74

தொழுது நமனுந்தன் றூதுவர்க்குச் சொல்லும்
வழுவில்சீர்க் காளத்தி மன்னன்—பழுதிலாப்
பத்தர்களைக் கண்டாற் பணிந்தகலப் போமின்கள்
எத்தனையுஞ் சேய்த்தாக வென்று. 86

மற்றும் பலபிதற்ற வேண்டா மடநெஞ்சே
கற்றைச் சடையண்ணல் காளத்தி—நெற்றிக்கண்
ஆரா வமுதின் றிருநாம மஞ்செழுத்துஞ்
சோராம லெப்பொழுதுஞ் சொல்.

---

## ந க் கீ ர தே வ நா ய னா ர்

### திருக்கண்ணப்பதேவர் திருமறம்

**திருக்கண் ணப்பன்** செய்தவத் திறத்து
விருப்புடைத் தம்ம விரிகட லுலகே ; **பிறந்தது**
தேனழித் தூனுண் கானவர் குலத்தே ; **திரிவது**
பொருபுலி குமிறும் பொருப்பிடைக் காடே ; **வளர்ப்பது**
செங்க ணாயொடு தீவகம் பலவே ; **பயில்வது**
வெந்திறற் சிலையொடு வேல்வாண் முதலிய
வந்தமில் படைக்கல மவையே ; **யுறைவது**
குறைதசை பயின்று குடம்பல நிரைத்துக்
கறைமலி படைக்கலங் கலந்த புல்லொடு
பீலி மேய்ந்தவை பிரிந்த வெள்ளிடை
வாலிய புலித்தோன் மறைப்ப வெள்வா
ரிரவும் பகலு மிகழா முயற்சியொடு
மடைத்த தேனும் வன்னாய் விட்டுஞ்
சிலைவிடு கணையினுந் திண்சுரி கையினும்
பலகிளை யவையொடும் பதைப்பப் படுத்துத்
தொல்லுயிர் கொல்லுந் தொழிலே ; **வடிவே**
மறப்புலி கடித்த வன்றிரண் முன்கை
திறற்படை கிழித்த திண்வரை யகல
மெயிற்றெண்கு கவர்ந்த விருந்த ணெற்றி
யயிற்கோட் டென்ன வெடுத்தெழு குறங்கு
செடித்தெழு குஞ்சி செந்நிறத் தறுகண்
கடுத்தெழும் வெவ்வுரை யவ்வாய்க் கருநிறத்
தடுபடை பிரியாக் கொடுவிற லதுவே ; **மனமே**
மிகக்கொலை புரியும் வேட்டையி லுயிர்க
ளகப்படு தயருக் ககனமர்ந் ததுவே ; **யிதுவக்**
**கானத் தலைவன் றன்மை** ; கண்ணுதல்
வானத் தலைவன், மலைமகள் பங்கன்,
எண்ணரும் பெருமை யிமையவ ரிறைஞ்சும்
புண்ணிய பாதப் பொற்பார் மலரிணை
தாய்க்கட் கன்றெனச் சென்றுகண் டல்லது
வாய்க்கிடு முண்டி வழக்கறி யானே ; யதாஅன்று ;
கட்டறல் விரித்த கனற்கதி ருச்சியிற்
சுட்டடி யிடந்தொறுஞ் சுறுக்கொளுஞ் சுரத்து
முதுமர நிரந்த முட்பயில் வளாகத்
தெதிரினங் கடவிய வேட்டையில் விரும்பி
யெழுப்பிய விருகத் தினங்களை மறுக்குறத்

தன்னாய் கடித்திரித் திடவடிக் கணைதொடுத்
தெய்து துணித்திடும்; துணித்த விடக்கினை
விறகினிற் கடைந்த வெங்கனற் காய்ச்சி
நறுவிய விறைச்சி நல்லது சுவைகண்
டண்ணாற் கமிர்தேன் றதுவே றமைத்துத்,
தண்ணறுஞ் சுனைநீர் தன்வாய்க் குடத்தான்
மஞ்சன மாக முகந்து, மலரெனக்
குஞ்சியிற் றுவர்க்குலை சொருகிக்
குனிசிலை கடுங்கணை யதனொடு மேந்திக்
கனல்விழிக் கருங்குர னாய்பின் றொடர, யாவரும்
வெருக்கோ ளுற்ற வெங்கடும் பகலிற்
றிருக்கா ளத்தி யெய்திய சிவத்து
வழிபடக் கடவ மறையோன் முன்னம்
துகிலிடைச் சுற்றியிற் றூநீ ராட்டி
நல்லன விரைமலர் நறும்புகை விளக்கவி
சொல்லின பரிசிற் சுருங்கலன் பூவும்
பட்ட மாலையுந் தூக்கமு மலங்கரித்,
தர்ச்சனை செய்தாங் கவனடி யிறைஞ்சித்
திருந்த முத்திரை சிறப்பொடு காட்டி,
மந்திர மெண்ணி வலமிடம் வந்து,
விடைகொண் டேகின பிற்றொழிற்
பூசனை தன்னைப் புக்கொரு காவிற்
றொடுசெருப் படியா னீக்கி வாயி
விடுபுனன் மேனியி லாட்டித்
தன்றலை தங்கிய துவர்ப்பூ வேற்றி, யிறைச்சியிற்
பெரிதும் போனகம் படைத்துப் பிரானைக்
கண்டுகண் டுள்ளங் கசிந்து காதலிற்
கொண்டதோர் கூத்துமுன் னாடிக் குரைகழ
லன்பொடு மிறுக விறைஞ்சி யாரா
வன்பொடு கானக மடையு; மடைந்த
வற்றை யயலினிற் கழித்தாங் கிரவியு
முதித்த போழ்தத் துண்ணீர் மூழ்கி
யாதரிக்கு மந்தணன் வந்து
சீரார் சிவற்குத் தான்முன் செய்வதோர் பொற்புடைப்
பூசனை காணான், முடிமிசை யேற்றிய
துவர்கண் டொழியான், மறித்து மிவ்வா
றர்ச்சனை செய்பவ ரியாவர்கொ? லென்று
கரந்திருந் தவணக் கானவன் வரவினைப்
பரந்த காட்டிடைப் பார்த்து நடுக்குற்று
வந்தவன் செய்து போயின வண்ணஞ்
சிந்தையிற் பொறாது, சேர்விடம் புக்கு,
மற்றை நாளுமவ் வழிப்பட் “டிறைவ!
வுற்றது கேட்டரு!; ளுன்றனக் கழகா
நாடொறு நான்செய் பூசனை தன்னை
யீங்கொரு வேடுவ

ஞயொடும் புகுந்து மிதித்துழக்கித்
தொடுசெருப் படியா னீக்கி வாயி
விடுபுனன் மேனியி லாட்டித்
தன்றலை தங்கிய சருகிலை யுதிர்த்தோ ரிறைச்சியை
நின்றிருக் கோயிலி லிட்டுப் போமது
வென்று முன்றனக் கினிதே? யெனையுருக்
காணிற் கொன்றிடும்; யாவ ராலும்
விலக்குறுங் குணத்த னல்ல னென்றுந்
திருக்குறும்" பென்றவன் சென்ற வல்லிடைக்,
கனவிலா த்ரிக்கு மந்தணன் றனக்குச்
சீரார் திருக்கா ளத்தியு ளப்பன்,
பிறையணி யிலங்கு பின்னுபுன் சடைமுடிக்
கறையணி மிடற்றுக் கனன்மழுத் தடக்கை
நெற்றி நாட்டத்து நிறைநீற் றுரக
வொற்றை மால்விடை யுமையொரு மருங்கிற்
றிருவுருக் காட்டி யருளிப்
"புரிவொடு பூசனை செய்யுங்
குனிசிலை வேடன் குணமவை யாவன
வுரிமையிற் சிறந்த மாதவ னென்றுணர்;
அவனுகந் தியங்கியவிட முனிவனமதுவே; யவன்
செருப்படியாவன விருப்புறு துவலே;
யெழிலவன் வாயது தூயபொற் குடமே;
யதனிற் றங்குநீர் கங்கையின் புனலே;
புனற்கிடு மாமணி யவனிரைப் பல்லே;
யதற்கிடு தூமல ரவனது நாவே;
யுப்புனல் விடும்பொழு தரிஞ்சிய மீசைப்
புன்மயிர்க் குசையினு நம்மடிக் கினிதே; யவன்றலை
தங்கிய சருகிலை தருப்பையிற் பொதிந்த
வங்குலி கற்பகத் தலரே; யவனுகந்
திட்ட விறைச்சி யெனக்குநன் மாதவ
ரிட்ட நெய்பா லவியே;
யிதுவெனக்; குனக்கவன்
கலந்த தோரன்பு காட்டுவ னுனை;
நலந்திக ழர்ச்சனை செய்தாங் கிரு"வென்
றிறையவ னெழுந் தருளின; னருளலு
மறையவ னறிவுற் றெழுந்து
மனமிகக் கூசி வைகறைக் குளித்துத்
தான்முன் செய்வதோர்
பொற்புடைப் பூசனை புகழ்தரச் செய்து
தோன்றா வண்ண மிருந்தன னாக; விரவியும்
வான்றனி முகட்டில் வந்தழல் சிந்தக்
கடும்பகல் வேட்டையிற் காதலித் தடித்த
வுடும்பொடு சிலைகணை யுடைத்தோல் செருப்புத்
தொடர்ந்த நாயொடு தோன்றினன்; றோன்றலுஞ்,
செல்வன் றிருக்கா ளத்தியு ளப்பன் றிருமேனியின்

மூன்று கண்ணா யாங்கொரு கண்ணிலு
முதிர மொழியா தொழுக விருந்தவனைக் ;
பார்த்து நடுக்குற்றுப் பதைத்துமனஞ் சுழன்று
வாய்ப்புனல் சிந்தக் கண்ணீ ரருவக்
கையி லூனொடு கணைசிலை சிந்த
நிலப்படப் புரண்டு நெடிதினிற் றேறிச்
சிலைக்கொடும் படைகடுத் தெடுத்திது படுத்தவ
ரடுத்தவி வனத்துள ரெனத்திரிந் தாஅங்
கின்மை கண்டு நன்மையிற்
றக்கன மருந்துகள் பிழியவும் பிழிதொறு
நெக்கிழி குருதியைக் கண்டு, நிலைதளர்ந்தெ
"னத்தனுக் கடுத்ததெ னத்தனுக் கடுத்ததெ"னென்
றன்பொடுங் கனற்றி,
"யித்தனை தரிக்கில, னிதுதனைக் கண்டவென்
**கண்டனை யிடந்து** கடவுடன் கண்ணுறு
**புண்ணி லப்பியுங்** காண்ப"னென்றொரு கண்ணிடைக்
கணையது மடுத்துக் கையில் வாங்கி
**யணைதர வப்பின ;** னப்பலுங் குருதி
நிற்பதொத் துருப்பெறக் கண்டுநெஞ் சுகந்து
மற்றைக் கண்ணிலும் வடிக்கணை மடுத்தனன்; மடுத்தலு
"நில்லுகண் ணப்ப! நில்லுகண் ணப்ப!!வென்
னன்புடைத் தோன்ற னில்லுகண் ணப்ப!!!"வென்
றின்னுரை யதனொடு மெழிற்சிவ லிங்கந்
தன்னிடைப் பிறந்த தடமலர்க் கையா
லன்னவன் றன்கையம் பொடுமகப் படப்பிடித்
தருளின ; னருளலும்
விண்மிசை வானவர்
மலர்மழை பொழிந்தனர் ; வளையொலி படகந்
துந்துபி கறங்கின ; தொல்சீர் முனிவரு
மேத்தின ரின்னிசை ; வல்லே
**சிவகதி பெற்றனன் றிருக்கண் ணப்பனே.**

## வெண்பா

தத்தையாந் தாய்தந்தை நாகனாந் தன்பிறப்புப்
பொத்தப்பி நாட்டுடுப்பூர் வேடுவனாந்—தித்திக்குந்
திண்ணப்ப னாஞ்சிறுபேர் செய்தவத்தாற் **காளத்திக்**
**கண்ணப்ப னாய்**நின்றான் காண்.

## கல்லாடதேவ நாயனார்

### திருக்கண்ணப்பதேவர் திருமறம்

பரிவின் றன்மை யுருவுகொண் டனையவன்,
போழ்வார் போர்த்த தாழகச் செருப்பினன்,
குருதி புலராச் சுரிகை யெஃகம்
அரையிற் கட்டிய வுடைதோற் கச்சையன்,
ஞொடும் பையிற் குறுமயிர் திணித்து
வாரில் வீக்கிய வரிக்கை கட்டிய,
னுழுவைக் கூனுகிர் கேழல்வெண் மருப்பு
மாறுபடத் தொடுத்த மாலையுந் தரிய,
னீலப் பீலி நெற்றி சூழ்ந்த
கானக் குஞ்சி கவடி புல்லினன்,
முடுகு நாறு குடிலை யாக்கையன்,
வேங்கை வென்று வாகை சூடிய
சங்கரன் றன்னினத் தலைவ, னோங்கிய
வில்லும் மம்பு நல்லன தாங்கி
யேற்றுக் கல்வனங் காற்றினி லியங்கிக்
கணையிலீ வீழ்த்துக் கருமா வறுத்துக்
கோலி னேற்றிக் கொழுந்தீக் காய்ச்சி
நாவில் வைத்த நாட்போ னகமும்,
தன்றலைச் சொருகிய தண்பளித் தாமமும்,
வாய்க்கல சத்து மஞ்சன நீருங்,
கொண்டு கானப் பேருறை கண்ணுதன்
முடியிற் பூசை யடியா னீக்கி
**நீங்காக் துணைந்துக்**
**கோசரிக்** கன்றவ னேசங் காட்ட
முக்க ணப்பனுக் கொருகணி னுதிரந்
தக்கி ணத்திடை யிழிதா, வக்கண
மழுது விழுந்து தொழுதெழுந் தாற்றிப்
புன்மருந் தாற்றப் போகா தென்று
**தன்னை மருந்தென்று மலர்க்க ணப்ப,**
வொழிந்தது ; மற்றை யொண்டிரு நயனம்
பொழிந்த கண்ணீர் கலுழி பொங்க
வற்ற தென்று மற்றைக் கண்ணையும்
பகழித் தலையா லகழ, வாண்டகை,
யொருகை யாலு மிருகை பிடித்து
“ வொல்லை நம்புண் ணொழிந்தது பாராய் !
நல்லை ! நல்லை !” யெனப் பெறுந்
**திருவேட் டுவர்**தந் திருவடி கைதொழக்
கருவேட் டுழல்வினைக் காரியங் கெடுமே.

## பரணதேவர்

சிவபெருமான் திருவந்தாதி

சென்றுசெருப் புக்காலாற் செல்ல மலர்நீக்கிச்
சென்று திருமுடிவாய் நீர்வார்த்துச்—சென்றுதன்
கண்ணிடந் தப்புங் கருத்தற்குக் காட்டினான்
கண்ணிடந் தப்பாமைப் பார்த்து.

---

## நம்பியாண்டார்நம்பி

கோயிற்றிருப்பண்ணியர்விருத்தம்

ஏவுசெய் மேருத் தடக்கை யெழிற்றில்லை யம்பலத்து
மேவுசெய் மேனிப் பிரானன்றி யங்கணர் மிக்குளரே
காவுசெய் காளத்திக் கண்ணுதல் வேண்டும் வரங்கொடுத்துத்
தேவுசெய் வான்வாய்ப் புனலாட் டியதிறல் வேடுவனே. 20

திருத்தொண்டர் திருவந்தாதி

நிலத்திற் றிகழ்திருக் காளத்தி யார்திரு நெற்றியின்மே
னலத்திற் பொழிதரு கண்ணிற் குருதிகண் டுண்ணடுங்கி
வலத்திற் கடுங்கணை யாற்றன் மலர்க்கண் ணிடந்தப்பினான்
குலத்திற் கிராதனங் கண்ணப்ப னாமென்று கூறுவரே. 11

---

## திருத்தொண்டர்புராணம்

பன்னிரண்டாந் திருமுறை

**திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருக்காளத்தி தரிசித்தது**

திருஞான - புராணம் (1013—1028)

மன்னுதிருப் பதிகவிசை பாடிப் போற்றி வணங்கிப்போந் *தப்பதியில் வைகி மாடு
பிஞ்ஞகர்தம் வெண்பாக்கம் முதலா யுள்ள பிறபதிகள் பணிந்தணைவார் பெருகு மன்பா
முன்னிறைந்த திருவாய்மஞ் சனநீ ராட்டு முதல்வேடர் **கண்ணப்ப நாய னாரை
யுன்னியோளிர் காளத்தி மலைவ ணங்க** வுற்றபெரு வேட்கையுட னுவந்து சென்றார்.

மிக்கபெருங் காதலுடன் றொண்டர் சூழ
மென்புனனட் டினையகன்று வெற்புங் கானுந்
தொக்கபெரு வன்புலக்கா னடைந்து போகிச்
சூலகபா லக்கரத்துச் சுடரு மேனி
முக்கண்முதற் றலைவனிட மாகி யுள்ள
முகினெருங்கு **காரிகரை** முன்னர்ச் சென்று
புக்கிறைஞ்சிப் போற்றிசைத்தப் பதியில் வைகிப்
பூதியரோ டுடன்மகிழ்ந்தார் **புகலி வேந்தர்.**

(காரிகரை வைப்புத் தலங்களுள் ஒன்று. அப்பர் சுவாமிகளும் தமது தல யாத்திரையில் இதனைத் தரிசித்தனர்.)

---

(*அப்பதி - பாசூர்.)

இறைவர்திருக் காரிகரை யிறைஞ்சி யப்பா
லெண்ணில்பெரு வரைகளிரு மருங்கு மெங்கு
நிறையருவி நிரைபலவாய் மணியும் பொன்னு
நிறைதுவலை புடைசிதறி நிகழ்ப வாகி
அறைகழல்வா னவர்க்கிறைவன் குலிச வேற்றால்
அற்றசிறை பெற்றவன்மே லெழுவ தற்குச்
சிறகடித்துப் பறக்கமுயன் றுயர்ந்த போலுஞ்
சிலைநிலத்தி லெழுந்தருளிச் செல்லா நின்றார்.

மாதவர்க ணெருங்குகுழாம் பரந்து செல்ல மணிமுத்தின் பரிச்சின்னம் வாம்பின் றாகப்
பூதிநிறைகடலணைவ தென்னச் **சண்பைப் புரவலனு** ரெழுந்தருளும் பொழுது சின்னத்
தீதிலொலி பலமுறையும் பொங்கி யெங்குந் " திருஞான சம்பந்தன் வந்தா " னென்னு
நாதநிறை செவியினவாய் மாக்க ளெல்லா நலமருவு நினைவொன்றாய் மருங்கு நண்ண,

கானவர்தங் குலமுலகு போற்ற வந்த **கண்ணப்பர் திருப்பாதச் செருப்புத்** தோய
மானவரிச் சிலைவேட்டை யாடுங் கானும் வான்மறைய நிலைபெரிய மாமுந் தூறும்
ஏனையிமை யோர்தாமு மிறைஞ்சி யேத்தி எய்தவரும் பெருமையவா மெண்ணி லாத
தானமுமற் றவைகடந்து **திருக்கா ளத்தி** சாரவெழுந் தருளினார் சண்பை வேந்தர்.

அம்பொன்மலைக் கொடிமுலைப்பால் குழைத்த ஞானத்
தமுதுண்ட **பிள்ளையா** ரணைந்தா ரென்று
செம்பொன்மலை வில்லியார் **திருக்கா ளத்தி**
சேர்ந்ததிருத் தொண்டர்குழா மடைய வீண்டிப்
பம்புசடைத் திருமுனிவர் கபாலக் கையர்
பலவேடச் சைவர்குல வேடர் மற்று
மும்பர்தவம் புரிவாரப் பதியி லுள்ளா
ருடன்விரும்பி யெதிர்கொள்ள வுழைச்சென் றுற்றார்.

திசையனைத்து நீற்றினொளி தழைப்ப மண்மேற்
சிவலோக மணைந்ததெனச் சென்ற போது
மிசைவிளங்கு மணிமுத்தின் சிவிகை நின்றும்
வேதபா ரகரிழிந்து வணங்கி மிக்க
வசைவில்பெருந் தொண்டர்குழாந் தொழுது போற்றி
யரவெனுமோ சையிலண்ட நிறைப்ப வன்பால்
இசைவிளங்குந் தமிழ்விரகர் " **திருக்கா ளத்தித்**
**திருமலையிம்** மலைகளில்யா ?" தென்று கேட்டார்.

வந்தணைந்த மாதவத்தோர் வணங்கித் தாழ்ந்து
" மறைவாழ்வே ! சைவசிகா மணியே ! தோன்று
மிந்தமலை காளனொ டத்தி தம்மி
லிகலிவழி பாடுசெய விறைவர் மேவும்
**அந்தமில்சீர்க் காளத்தி** மலையா " மென்ன,
வவனிமேற் பணிந்தெழுந்தஞ் சலிமேற் கொண்டு
சிந்தைகளி மகிழ்ச்சிவாத் **திருவி ராகம்**
**வான்வர்க டான்வ**ரொன் றெடுத்து செல்வார்,

திருந்தியவின் னிசைவகுப்புத் திருக்கண் ணப்பர்
திருத்தொண்டு சிறப்பித்துத் திகழப் பாடிப்
பொருந்துபெருந் தவர்கூட்டம் போற்ற வந்து
பொன்முகரிக் கரையணைந்து தொழுது போகி
யருந்தவர்க ளெம்மருங்கு மிடைந்து செல்ல
வாளுடைய பிள்ளையா ரயன்மா றேடு
மருந்துவெளி யேயிருந்த திருக்கா ளத்தி
மலையடிவா ரஞ்சார வந்து தாழ்ந்தார்.

தாழ்ந்தெழுந்து திருமலையைத் தொழுது கொண்டே
தடஞ்சிலா தலசோபா னத்தா லேறி
வாழ்ந்திமையோர் குழாநெருங்கு மணிநீள் வாயில்
மருங்கிறைஞ்சி யுட்புகுந்து வளர்பொற் கோயில்
சூழ்ந்துவலங் கொண்டிறைவர் திருமுன் பெய்தித்
தொழுதுதலை மேற்கொண்ட செங்கை போற்றி
வீழ்ந்தெழுவார் கும்பிட்ட பயன்காண் பார்போல்
மெய்வேடர் பெருமானைக் கண்டு வீழ்ந்தார்.

உள்ளத்திற் றெளிகின்ற வன்பின் மெய்ம்மை
யுருவினையு மவ்வன்பி னுள்ளே மன்னும்
வெள்ளச்செஞ் சடைக்கற்றை நெற்றிச் செங்கண்
விமலரையு முடன்கண்ட விருப்பும் பொங்கிப்
பள்ளத்தி விழிபுனல்போற் பாந்து செல்லப்
பைம்பொன்மலை வல்லிபரிந் தளித்த செம்பொன்
வள்ளத்தில் ஞானவா ரமுத முண்டார்
மகிழ்ந்தெழுந்து பலமுறையும் வணங்கு கின்றார் ;

பங்கயக்கண் ணருவிநீர் பாய நின்று பரவுமிசைத் திருப்பதிகம் பாடி யாடித்
தங்குபெருங் களிகூர நகைந்து தட்பத் தம்பெருமான் கழல்போற்றுந் தன்மை நீட
அங்கரிதிற் புறம்போந்தங் கயன்மால் போற்ற வரியார்தந் திருமலைக்கீ ழணைந்திறைஞ்சிப்
பொங்குதிருத் தொண்டர்மடங் காட்ட வங்குப் புக்கருளி யினிதமர்ந்தார் புகலி வேந்தர்.

யாவர்களு மறிவரிய விறைவன் றன்னை யேழுலகு முடையானை யெண்ணி லாத
தேவர்கடம் பெருமானைத் திருக்கா ளத்தி மலையின்மிசை வீற்றிருந்த செய்ய தேனைப்
பூவலரும் பொழில்புடைசூழ் சண்பை யாளும் புரவலனார் காலங்க டோறும் புக்குப்
பாவலர்கொண் டடிபோற்றிப் பருகி யார்ந்து பண்பினிய திருப்பதியிற் பயிலு நாளில்,

அங்கண்வட திசைமேலுங் குடக்கின் மேலும் அருந்தமிழின் வழக்கங்கு நிகழா தாகத்
திங்கள்புனை முடியார்தந் தானந் தோறுஞ் சென்றுதமி ழிசைபாடுஞ் செய்கை போல
மங்கையுடன் வானவர்கள் போற்றி சைப்ப வீற்றிருந்தார் வடகயிலை வணங்கிப் பாடிச்
செங்கமல மலர்வாவித் திருக்கே தாரந் தொழுதுதிருப் பதிகவிசை திருந்தப் பாடி,

கூற்றுதைத்தார் மகிழ்ந்தகோ கரணம் பாடிக்
குலவுதிருப் பருப்பதத்தின் கொள்கை பாடி
ஏற்றின்மிசை வருவாரின் றிரன்ற னீலப்
பருப்பதமும் பாடிமகிழ்ந் திறைவர் தானம்

போற்றியசொன் மலர்மாலை பிறவும் பாடிப்
புகலியர்தம் பெருந்தகையார் புனித மாகு
நீற்றினணி கோலத்துத் தொண்டர் சூழ
நெடிதுமகிழ்ந் தப்பதியி னிலவு கின்றார் ;

தென்றிசையிற் கயிலையெனுந் திருக்கா ளத்தி
போற்றியினி தமர்கின்றார் திரைசூழ் வேலை
யொன்றுதிரு வொற்றியூ ருறைவார் தம்மை
யிறைஞ்சுவது திருவுள்ளத் துன்னி யங்கண்
இன்றமிழின் விரகாருள் பெற்று மீள்வார்
எந்தையா ரிணையடியேன் மனத்த வென்று
பொன்றரளங் கொழித்திழிபொன் முகரி கூடப்
புனைந்ததிருப் பதிகவிசை போற்றிப் போந்தார்.

---

திருநாவுக்கரசுநாயனர் திருக்காளத்தி தரிசித்தது

(திருநா - புராணம் 343—348)

பல்பதியு நெடுங்கிரியும் படர்வனமுஞ் சென்றடைவார்
செல்கதிமுன் னளிப்பார்தந் திருக்காரி க்கரைப்ணிந்து
தொல்கலையின் பெருவேந்தர் தொண்டர்கள்பின் னும்பர்குழா
மல்குதிருக் காளத்தி மாமலைவந் தெய்தினார்.

பொன்முகரித் திருநதியின் புனிதநெடுந் தீர்த்தத்தின்
முன்முழுகிக் காளத்தி மொய்வரையின் றாழ்வரையிற்
சென்னியுறப் பணிந்தெழுந்து செங்கண்விடைத் தனிப்பாகர்
மன்னுமலை மிசையேறி வலங்கொண்டு வணங்குவார் ;

காதணிவெண் குழையானைக் காளத்தி மலைக்கொழுந்தை
வேதமொழி மூலத்தை விழுந்திறைஞ்சி யெழுந்துபெருங்
காதல்புரி மனங்களிப்பக் கண்களிப்பப் பரவசமாய்
நாதனை "யென் கண்ணுள்ளா " னெனுந்திருத்தாண் டகநவின்றார்.

மலைச்சிகரச் சிகாமணியின் மருங்குறமுன் னேநிற்குஞ்
சிலைத்தடக்கைக் கண்ணப்பர் திருப்பாதஞ் சேர்ந்திறைஞ்சி
யலைத்துவிழுங் கண்ணருவி யாகத்துப் பாய்ந்திழியத்
தலைக்குவித்த கையினராய்த் தாழ்ந்துபுறம் போந்தணைந்தார்.

சேணிலவு திருமலையிற் றிருப்பணியா யினசெய்து
தாணுவினை யம்மலைமேற் றள்பணிந்த குறிப்பினால்
பேணுதிருக் கயிலைமலை வீற்றிருந்த பெருங்கோலங்
காணுமது காதலித்தார் கலைவாய்மைக் காவலனார்.

வேறு

அங்கண் மாமலை மேன்ம ருந்தை வணங்கி யாரு ளான்மிகப்
பொங்கு காதலி னுத்த ரத்திசை மேல்வி ருப்பொடு போதுவார்
துங்க மால்வரை கானி யாறு தொடர்ந்த நாடு கடந்தபின்
செங்கண் மால்விடை யண்ணல் மேவு திருப்ப ருப்பத மெய்தினார்.

## சுந்தரமூர்த்தி நாயனார் திருக்காளத்தி தரிசித்தது

(ஏயர்கோன் - புராணம் 195—197 பாட்டுக்கள்)

மன்னு திருமாற் பேறணைந்து வணங்கிப் பாவித் திருவல்லந்
தன்னு ளெய்தி யிறைஞ்சிப்போய்ச் சாரு மேல்பாற் சடைக்கற்றைப்
பின்னன் முடியா ரிடம்பலவும் பேணி வணங்கிப் பெருந்தொண்டர்
சென்னி முகிறோய் தருங்குவட்டுத் திருக்கா ளத்தி மலைசேர்ந்தார்.

தடுக்க லாகாப் பெருங்காதற் றலைநின் றருளுங் கண்ணப்பர்
இடுக்கண் களைந்தாட் கொண்டருளும் இறைவர் மகிழ்ந்த காளத்தி
அடுக்கல் சேர வணைந்துபணிந் தருளா லேறி யன்பாறு
மடுப்பத் திருமுன் சென்றெய்தி மலைமேன் மருந்தை வணங்கினார்.

வணங்கி யுள்ளங் களிகூர மகிழ்ந்து போற்றி மதுரவிசை
அணங்கு "செண்டா" டெனும்பதிகம் பாடி யன்பாற் கண்ணப்பர்
மணங்கொள் மலர்ச்சே வடிபணிந்து வாழ்ந்து போந்து மன்னுபதி
இணங்கு தொண்ட ருடன்கெழுமி இன்புற் றிருக்கு மந்நாளில்.

## திருமூலநாயனார் திருக்காளத்தி தரிசித்தது

(திருமூலர் - புராணம் 4, 5 பாட்டுக்கள்)

திருச்சிற்றம்பலம்

கங்கைநீர்த் துறையாடிக் கருத்துறைநீள் கடலேற்றும்
அங்கணர்தா மகிழ்ந்தருளு *மவிமுத்தம் பணிந்தேத்தி
மங்குல்வளர் வரைவிந்த மன்னுபருப் பதமிறைஞ்சித்
திங்களணி சடையர்திருக் காளத்தி மலைசேர்ந்தார்.

நீடுதிருக் காளத்தி நிலவுதா ணுவைவணங்கி
ஆடுதிரு வரங்கான வாலவனந் தொழுதேத்தித்
தேடுமிரு வருக்கரியார் திருவேகாம் பரம்பணிந்து
மாடுயர்மா மதிற்காஞ்சி வளநகருள் வைகினார்.

திருச்சிற்றம்பலம்

தெய்வச் சைவத் திருமுறைத் திரட்டு முற்றும்

கந்தபுராணம்

## கந்தக்கடவுள் திருக்காளத்தி கண்டது

சிலந்தி மாசுண மும்மதக் கரிசிவ கோசன்
மலைந்தி டுஞ்சிலை வேட்டுவன் கீரனே மடவார்
பலந்த ரும்வழி பாட்டினாற் பாட்டினாற் பரனைக்
கலந்து முத்திசேர் தென்பெருங் கயிலையுங் கண்டான்.

—வழிநடைப்படலம் 7

*அவிமுத்தம் - காசி.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# கண்ணப்பநாயனார் புராணம்

தொகை

"கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்க் கடியேன்"—திருத்தொண்டத்தொகை

வகை

"நிலத்திற் றிகழ்திருக் காளத்தி யார்திரு நெற்றியின்மே
லலத்திற் பொழிதரு கண்ணிற் குருதிகண் டுண்ணடுங்கி
வலத்திற் கடுங்கணை யாற்றன் மலர்க்கண் ணிடந்தப்பினான்
குலத்திற் கிராதனங் கண்ணப்ப னாமென்று கூறுவரே"

—திருத்தொண்டர் திருவந்தாதி

விரி

650. மேவலர் புரங்கள் செற்ற விடையவர் வேத வாய்மைக்
காவலர் திருக்கா ளத்திக் கண்ணப்பர் திருநா டென்ப
நாவலர் புகழ்ந்து போற்று நல்வளம் பெருகி நின்ற
பூவலர் வாவி சோலை சூழ்ந்தபொத் தப்பி நாடு. க

புராணம்:—தமது கண்ணையிடந்து இறைவனது கண்ணிலே அப்பியதனாற் கண்ணப்பர் என்று பேர் பெற்ற நாயனாரது வரலாறும் பண்பும் கூறும் பகுதி. நிறுத்த முறையானே இலைமலிந்த சருக்கத்து மூன்றாவதாகிய கண்ணப்ப நாயனார் புராணங் கூறத் தொடங்குகின்றார்.

தொகை:—கலைகள் யாவற்றினும் மேம்பட்டு விளங்கும் சிறப்பினைப் பெற்ற தலைவராகிய கண்ணப்ப நாயனாருக்கு நான் அடியேனாவேன். **கலைமலிந்த சீர்** - எல்லா நூல்களாலும் விதந்து பேசப்பட்ட சிறப்பு. **மலிதல்** - மேம்பாடுற்று நிறைதல். இங்குச் **சீர்** என்றது அன்பின் சிறப்பினை. வீடுபேறும் உலக வாழ்வுமாகிய நிலைகள் இரண்டிற்கும் ஒப்ப இன்றியமையாது வேண்டப்படும் சிறப்பாவது அன்பே என்பது எல்லாக் கலைகளுக்கும் ஒப்ப முடிந்த உண்மை. **நம்பி** - ஆடவரிற் சிறந்தோன். "நம்பி என்பது நாமச் சிறப்பே" - பிங்கலம். "ஆடவன் கொன்றா னச்சோ!" என இவரது மெய்காப்பாளரும் புகழவும், "மாறிலாய் நிற்க" என்று இறைவரும் விளிக்கவும் வாய்ந்த சிறப்புக்களை இங்கு உன்னுக. **கண்ணப்பர்** - இது இறைவனுக்கு இவர் தம் கண்ணையிடந்து அப்பிய காரணம்பற்றி இறைவன் தந்த திருப்பெயர்; இவரது பெற்றோர்களால் இடப்பட்ட பெயரன்று. சரிதக் குறிப்பும் தேற்றமும் பெற இப்பெயராற் குறித்தார்.

வகை:—பூவுலகிற் சிறந்துவிளங்கும் திருக்காளத்தி இறைவரது நலத்தைத்தரும் திருக்கண்ணில் குருதிபொழியக் கண்டு மனநடுங்கி அம்பினாலே தனது வலதுகண்ணைத் தோண்டி அப்பினவர் வேடர்குலத்துதித்த கண்ணப்பராமென்று சொல்வர் பெரியோர்.

**நிலத்தில் திகழ்** - உலகில் தட்சிண கயிலாயமென்று விளங்குகின்ற. **நெற்றியின் மேல்** - முகத்தினிடத்து. நெற்றி ஆகுபெயராய் ஈண்டு முகத்தை உணர்த்தி நின்றது. **நலத்திற்றந கண்ணிற் பொழிதருநதி கண்டு** என மாற்றுக. **நலத்தில்** - ஏழாவதன் உருபு இரண்டாம் வேற்றுமைப் பொருளில் வந்தது. ஈண்டு **நலம்** என்றது "அங்கணர் கருணை கூர்ந்த வருட்டிரு நோக்கத்தினை", (753). **உண்ணடுங்கி** - இதன் விரிவு புராணம் 170-ம் திருப்பாட்டு முதலியவற்றாலறிக.

**வலத்தில் மலர்க்கண் இடந்து** - என்று கூட்டுக. **கிராதன்** - வேடன். அப்பினவன் கண்ணப்பனும் என்று கூட்டுக. பெரியோர் என்ற தோன்றா எழுவாய் வருவிக்க.

பெயரும் சரிதக்குறிப்பும் பெருமைப் பண்பும் முதனூல் பேசிற்று. இவர் பேறு பெற்ற தலமும் சரித வரலாறும் மரபும் பெயரும் பிறவும் வகைநூல் வகுத்தது. இவை விரிந்தபடி புராணத்துட் காண்க.

650. **(இ - ள்)** வெளிப்படை. அடையலாரது முப்புரங்களை அழித்த விடையவராகிய வேதவாய்மைக் காவலரது திருக்காளத்தியிலே பேறடைந்த கண்ணப்ப நாயனாரது திருநாடாவது, புலவர்கள் புகழ்ந்து பாராட்டும் நல்ல வளங்கள் பெருகி நிலைத்ததும் பூக்கள் மலர்ந்த வாவிகளும் சோலைகளும் சூழ்ந்ததுமாகிய பொத்தப்பி நாடாகும் என்று சொல்வர் பெரியோர்.

**(வி - ரை) மேவலர்** - அடையலர் : பகைவர். **புரங்கள்** - முப்புரம். **செற்ற** - நகைத்து அழித்த. **செற்ற** என்றதனால் வேண்டுதல் வேண்டாமையிலாத இறைவனுக்குச் செற்றம் முதலிய குற்றம் ஏற்றியதாகாது எனக் குறிக்க **விடையவர்** - என்றார். **விடை** - தருமதேவதையாகிய இடபம். புரங்களை இறைவன் எரித்தது மறத்தினைப் போக்கி உயிர்களுக்குத் துன்பந்துடைத்துப் போகமளித்தற்கேயாம். தருமம் யுகந்தோறுங் குறைந்துவந்து இறுதியில் அழியாது இறைவனிடம் ஒடுங்கி நிற்குமென்பர். இனி, "தடமதில்க ளவைமூன்றுந் தழலெரித்த வந்நாளில் இடபமதாய்த் தாங்கினான் றிருமால்காண் சாழலோ" (திருவாசகம்) என்றபடி முப்புரமெரித்த ஞான்று விடையாய் நின்ற திருமாலின் மீது எழுந்தருளியவர் என இரண்டையும் உடன் குறிப்பார் **செற்ற விடையவர்** என்றார் என்பதுமாம். முப்புரமெரித்தல் என்பது மும்மலகாரியங்களை அழித்தலாகிய இறைவனது செயலைக் குறிப்பதாகக் கூறுவர் திருமூல நாயனார்.

**வேதவாய்மைக் காவலர்** - வேதங்களில் விதிக்கப்பட்ட அறம் - வாய்மை - என்னுமிரண்டில் அறத்தை மேல் விடையவர் என்றதனாற் கூறினாராதலின் ஏனை **வாய்மை**யை இதனாற் குறித்தார். "அறவினை யாதெனிற் கொல்லாமை", "ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன், பின்சாரப் பொய்யாமை நன்று" என்றிவ்விரண்டினையும் வரையறுத்து முறைப்படுத்திய நீதிநூலும் காண்க. வேதமும், அறத்தைச் செய் - சத்தியத்தைப் பேசு - என்று இம்முறையிலே பேசிற்று. இம்முறைபற்றியே இங்கு ஆசிரியர் **விடையவர்** என்றும், அதன்பின் **வாய்மைக்காவலர்** என்றும் வைத்த அமைப்பும் காண்க. கொல்லாமை அறமாகியவழி, அஃது அவ்வறக்கடவுள் புரங்கள் செற்றார் என்றதனோடு முரணுமை மேலுரைக்கப்பட்டது. இதனைக் "கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல்" என்பது போலக் காண்க.

இங்கு இச்சரிதத்தினும் நாயனார் பல பிராணிகளை வேட்டையாடிக் கொன்று இறைவனுக்கு நிவேதித்தனர். அவை கொலையாகாது அவற்றை ஈடேறச் செய்த அருட் செயலேயாயின என்று பின்னர்க் காண்போம். "ஒளிநின்று கொன்றருளி"- (790) என்பர் ஆசிரியர். இச்சரிதக் குறிப்பும் பெற இங்கு இவ்வாறு தொடங்கினார்.

**வாய்மை** - வாயின் தன்மை. அது சத்தியத்தினைப் பேசுதல். இதுவே, சத்தியத்தை உன்னும் உள்ளத்தின் நிலையில் **உண்மை** என்றும், அதனை மெய்யாரச் செய்யும் நிலையில் **மெய்மை** எனவும் பெற உள்ளது. சத்து - அழியாதது. இங்கு



சீ - காளம் - அத்தி — சீகாளத்தி

(சிலந்தி  பாம்பு  யானை)

இத்திருவுருவங்கள்
திருக்கோயிலி னுட்சுற்றில் உள்ளவை.

—பாட்டு - க - (திருஞான. புரா. 1021) - பக்கம் - ரு



காளத்தித் திருக்கோயில் - ஐந்து கோபுரங்கள்
(மலை மேலிருந்து பார்வை)

இச் சரிதத்தில் இறைவர் தமது நின்மலமாகிய சத்தித்திருமேனியிற் கண்போலவும் அதிற் குருதிபோலவும் காட்டினர். இவ்வாறு இல்லாதவற்றை உள்ளனபோலக் காட்டியவரை **வாய்மைக் காவலர்** என்ற தென்னை ? எனின், அவை நாயனரின் உண்மையைக் காட்ட எழுந்தன ஆகலின் வாய்மைக்காவலின் நிகழ்ந்தன என்க. இதுவும் இச்சரிதக் குறிப்பாதல் காண்க.

இவ்வாறன்றி வேதம் உபசார மாத்திரையாய் எல்லாத் தேவரையும் சொல்லுமாயினும் உண்மையிற் சிவனையே முதல்வனுக உள்ளத்தில் (இதயத்தில்) வைத்துக் கூறும் ஆதலின் அவ்வாறு வேத உண்மையாய் நின்ற **காவலர்** என்றலுமாம்.

**திருக்காளத்தி** - சிலந்தியும், காளனும் (பாம்பு), அத்தி(யானை)யும் பூசித்துப் பேறு பெற்றமையால் இப்பேர் பெற்றது. "இந்தமலை காளனே டத்தி தம்மி லிகலிவழி பாடுசெய விறைவர் மேவு, மந்தமில்சீர்க் காளத்தி மலையாம்" (திருஞான - புராண - 1021) முதலியவைகாண்க. தலவிசேடம் பார்க்க.

**திருக்காளத்திக் கண்ணப்பர்** - காளத்தியிலே வழிபட்டுக் கண்ணப்பிப்பேறுபெற்றவர் என்றது சரிதக் குறிப்பு. காளத்தியும் கண்ணப்பரும் பிரிக்கக்கூடாதபடி யிணைந்துள்ள நிலையும் குறிப்பதாம். கண்ணப்பர் என்ற பேர் காளத்தியிற் போந்தது என்பதும் குறித்தார்.

**கண்ணப்பர் திருநாடு** - **திருநாடு** - அவதரித்த நாடு. **கண்ணப்பர்** - இவருக்குத் தாய் தந்தையர் இட்ட **திண்ணன்** என்றதனிலும் இப்பெயரே சிறந்தது.இஃது இறைவன் தந்தது. ஆசாரியர்கள் யாவரும் இப்பெயர்கொண்டே துதித்தனர். இஃது அவர் சரிதங் குறிப்பதுமாம்; ஆதலின் இப்பெயரால் தோற்றுவாய் செய்தனர்.

**நாவலர் புகழ்ந்து போற்று நல்வளம்** - குறிஞ்சிநில வளத்தைத் தமிழ் இலக்கணம் முறை செய்யும் வகையினைப் புகழ்ந்து என்றும், இந்நாட்டுக் குறிஞ்சி, தலையன்புக் கிலக்கியமாய் நிற்கும் நாயனர் அவதரிக்கும் பேறு பெற்ற நாடாயினமையின் **போற்றும்** என்றும் கூறினர். இது பற்றியே **வளம்** என்னது **நல்வளம்** என்றதுமாம். அச்சிறப்பு மிகுதியும் பெற்றதனேடு எஞ்ஞான்றும் நிலைபெறவும் பெற்ற **தென்பார் பெருகி நின்ற** என்றார். **நாவலர்** - கலைவாணி யருள்பெற்ற கலை நாவலரும், ஞான வாணி தந் நாவிற் பதியப் பெற்ற ஞான நாவலரும் என நாவலராவார் இருவகையினர். இங்குக் கூறிய நாவலர் பிற்கூறிய நிலையினராகிய நக்கீரதேவர், சமய குரவர் முதலிய ஞானத் தமிழ் நாவலர். பதினெராந் திருமுறை முதலாயின அருட்பாட்டுக்கள் காண்க.

**பூ அலர் வாவி சோலை** - வாவியிற் பூப்பன தாமரை முதலிய நீர்ப்பூக்கள். நால் வகைப் பூக்களில் ஏனை மூன்றும் சோலையிற் பூப்பன. இவை யெல்லாம் இந்நாட்டிற் காண உளவாம் என்பார் **வாவி சோலை** என்று சேர்த்துக்கூறினர். **வாவிசோலை** - உம்மைத் தொகை. இவை ஏனை நாட்டிற் போலச் செயற்கையானன்றி இங்கு இயல்பிற் பொருந்துவன என்ற குறிப்புப் பெறச் **சூழ்ந்த** என்றார்.

**போத்தப்பி நாடு** - காளத்திமலைச் சாரலுக்கு வடக்கே 40 - 50 நாழிகை யளவில் உள்ளது. குறிஞ்சிப் பகுதியைச் சேர்ந்த மலைநாடு. இப்பெயர் இன்றும் வழக்கி லிருக்கின்றது. பொத்தப்பி நாட்டைக் கண்ணப்பர் திருநாடென்ப எனக் கூட்டுக.

போற்ற—பெருக—போத்தப்பி—என்பனவும் பாடங்கள். 1

651. இத்திரு நாடு தன்னி லிவர்திருப் பதியா தென்னி
னித்தில வருவிச் சார னீள்வரை சூழ்ந்த பாங்கர்
மத்தவெங் களிற்றுக் கோட்டு வன்றெடர் வேலி கோலி
யொத்தபே ரரணஞ் சூழ்ந்த முதுபதி யுடுப்பூ ராகும். உ

(இ - ள்) வெளிப்படை. இந்தத் திருநாட்டிலே இவரது திருப்பதியாவது யாது என்னில், முத்துக்களைக் கொழித்து வரும் அருவிகள் ஓடுதற் கிடமாகிய சாரல்களை

யுடைய நீண்ட மலைகள் சூழ்ந்த பக்கத்தில் மதம் பொருந்திய யானைகளின் கொம்புகளால் வலிய தொடர்ந்த வேலியிட்ட அதனால் ஒரே தன்மைத்தாகும் பெரிய மதிலாணாற் சூழப்பட்டு விளங்கும் பழம்பதியாகிய **உடுப்பூர்** என்பதாம்.

**(வி - ரை) திருநாடு - திருப்பதி** - என்புழித் திரு என்பன நாயனார் அவதரிக்கும் நலம் பெற்ற சிறப்புக் குறித்தன. பெரியவர்கள் அவதரித்ததனால் அந்நாடு பெருமை பெறும் என்றதனை "அறந்தருநா வுக்கரசும் ஆலால சுந்தரரும் பிறந்தருள உளதானால் நம்மளவோ" என்று திருமுனைப்பாடி நாட்டுக்கும், "ஐயர் நீரவ தரித்திட விப்பதி யளவில் மாதவ முன்பு, செய்தவாறு" - திருஞான - புரா - (179) என்று நகரத்துக்கும் சிறப்புக் கூறிய வகையில் ஆசிரியர் அறிவித்திருத்தல் காண்க.

**நித்தில அருவி** - மலையின் மூங்கில் - யானைக்கோடு முதலியவற்றினின்று பிறக்கும் முத்துக்களை வாரிவரும் அருவிகள்.

**நீள்வரை சூழ்ந்த பாங்கர்** - உயரத்தாலும் பரப்பினாலும் நீண்ட மலைகளாற் சுற்றப்பட்ட பக்க இடங்களில். **மத்த**-மதத்தையுடைய ; வடசொல். "மத்தோன்மத்த னாக்கி" என்ற திருவாசகமுங் காண்க. இங்கு மதம் யானைகளுக்கு இயற்கை யடைமொழி. **வெம்மை** - கொடுமை.

**வன் தொடர் வேலி கோலி** - யானைக் கொம்புகளை வரிசையும் வலிமையும் பெறத் தொடர்ச்சியாய் நாட்டி வேலியாக அமைத்து. மலைச்சாரலாதலின் புலி முதலிய கொடிய மிருகங்கள் மிக்கு வாழும் ; அவை பதியினுள்ளே புகுந்து மக்களையும் அவர்கள் கவர்ந்து வளர்க்கும் ஆனிரை மான் முதலியவற்றையும் துன்புறுத்தாதபடி மதில்போல நகர்காவல் செய்வதனைக் குறித்து **வேலி கோலி** என்றார்.

**ஒத்தபேர் அரணம்** - புறப்பகையாகிய பகைவர் வாராது காப்பது நீள்வரை சூழ்ந்த மலையரண் ; உட்பகையாகிய ஏனை மிருகங்கள் வாராது காப்பது யானைக் கொம்பின் வேலியாலாகிய இந்த மதிலரண் ; இவ்விரண்டும் ஒத்துச் சூழ்ந்து பெரிய அரண்களாய் இந்தப் பதியைச் சுற்றியிருந்தன என்க. எனவே, இப்புராணத் தலைவராகியநாயனார் புறப்பகை உட்பகை எனும் இவ்விரு பகையும் வாராது முற்பிறப்பிலே தவம் புரிந்து காவல் செய்து இங்கு வந்தவதரித்து இறைவனடி கூடியதாகிய இச்சரிதத்துக்கு ஏற்க நகர்வளப் பொருளைக் குறித்த நயமும் காண்க.

**முதுபதி** - பழம்பதி. **பதி** - மலை நாட்டு ஊர்களுக்கு வழங்கும் பெயர்களில் ஒன்றாம். குறிஞ்சி நிலத்து ஊர்கள், சிறூர் (664) சிறுகுடி - குறிச்சி என்பர். குறிச்சி வாழ்க்கை (657 - 687) என்றது காண்க. இந்நாளிலும் மலைசர்பதி - இருளர்பதி என்னும் வழக்குக்கள் மலைநாட்டில் (கொங்கு நாட்டில்) வழங்குவன காண்க. **ஆகும்** - உயிர்களுக்கு ஆக்கம் தரும் இடம் என்ற குறிப்புமாம். 2

652. குன்றவ ரதனில் வாழ்வார் கொடுஞ்செவி ஞமலி யார்த்த
வன்றிரள் விளவின் கோட்டு வார்வலை மருங்கு தூங்கப்
பன்றியும் புலியு மெண்குங் கடமையு மானின் பார்வை
யன்றியும் பாறை முன்றி லைவன முணங்கு மெங்கும். ௩

**(இ - ள்)** வெளிப்படை. அப்பதியில் வாழ்பவர்கள் மலைவாழ்நராகிய குன்றவர்கள். அப்பதியின் இடமெங்கும் வளைந்த காதுகளையுடைய நாய்களைக் கட்டிய வலிய கூட்டமாகிய விளாமரக் கிளைகளில் வார்களையுடைய வலைகள் பக்கங்களில் தொங்க, காட்டுப் பன்றியும், புலியும், காடியும், கடமை முதலிய மானினங்களும் என்றிவற்றின் பார்வை மிருகங்களும் உள்ளன ; அன்றி, இல்லங்களின் முன்னர்ப் பாறை முற்றங்களில் ஐவன அரிசியும் உணங்கும் (உலரும்).

**(வி - ரை) அதனில் குன்றவர் வாழ்வார்** என மாற்றுக.

**குன்றவர்** - குறிஞ்சிநில மக்கள். இவர்கள் கானவர் (662) வேட்டுவர் (654), குறவர் (664) இறவுளர் (665), வேடர் (655), மறவர் (656) எனவும் பெறுவர். இப்பெயர்கள் பலவும் இப்புராணத்தினுள் வழங்கிய இலக்கிய அமைவுங் காண்க.

**கோடுநீஞ்செவி ஞமலி** - காது வளைந்து தொங்கியிருத்தல் சிறந்தசாதி வேட்டை நாய்களின் இலக்கணங்களில் ஒன்றென்பர். வேட்டை பயில்வோர் பலர் தொங்கிய காதுடைய நாய் வகையை வளர்த்தல் கண்கூடு. வேட்டையில் இவர்களுக்கு நாய்கள் பயன்படும் செய்தி பின்னர் 717 - 725 - 734 முதலிய பாட்டுக்களிற் காண்க.

**வன் திரள் விளவின் கோட்டு** - வரைசூழ்ந்த குறிஞ்சிநிலமாதலின் விளாமரங்கள் கூட்டமாக அங்கு அப்பதியில் ஓங்கி வளர்ந்திருந்தன என்பதாம். அவை நாய்களைக் கட்டி வைத்தற்கும், மேற்கொம்புகளில் வார்வலைகள் தொங்கவிட்டு வைத்தற்கும் உதவுவன. "பார்வை யாத்த பறைதாள் விளவின் " (பெரும்பாணாற்-95) என்றதும் காண்க.

**வன் திரள் விளா** - குன்றவர் தமது குறிச்சி வாழ்க்கைக் குடியிருப்பிடங்களை விளாமரங்கள் சூழ்ந்த சூழலின் அமைத்தனர். அன்றித், தம் குடியிருப்பிடங்களைச் சூழ விளாமரங்களை வைத்து வளர்த்தனர் என்றலுமாம். விளாமரச் சூழலின் காற்று உடற் சுகந் தருவதனோடு அவை இவர்களது முயற்சியின்றியே இயல்பின் வளர்ந்து பலன் தருவன. அவற்றின் பழங்கள் சுகந்தரும் உணவாதலும் காண்க. "வேரி விளங்கனிக் கவளங் கொள்வார்"-(684) என்று பின்னர்க் கூறுதலும் உன்னுக. விளாமரத்தின் குணம்-"காச சுவாசங் கதித்த வரிடுமுதற், பேசரிய தாகமிவை பேசுங்கால் - வீசு, தபித்தலைச்செய் பித்தந் தரிக்குமோ பூவிற், கபித்த மாமிருக்குங் கால்"-(கபித்தமரம்-விளாமரம்); விளாம்பழத்தின் குணம் - "எப்போது மெய்க்கிதமா மீளையிரு மல்கபமும், வெப்பாகுந் தாக மும்போ மெய்ப்பசியா—மிப்புவியி, லென்றாகி லுங்கனிமே லிச்சைவைத்துத் தின்ன வெண்ணித், தின்றால் விளங்கனியைத் தின்" - என்ற பதார்த்தகுண சிந்தாமணிப் பாட்டுக்களுங் காண்க. விளங்கனியின் ஓடு முதலியவை மருந்தாக உதவுதல் மருத்துநூல்களுட் காண்க.

**வார் வலை** - வாரும் வலையும். 724 - பார்க்க. இவைகள் வேட்டைக் காடு காவல் செய்து அமைத்து மாக்களை அகப்படுத்த வுதவுவன. 718 - 724 - 736 முதலிய பாட்டுக்களில் வார் வலையை இவ்வேடர்கள் தொழிற்படுத்திய முறை காண்க. **வார் வலை** - நீண்ட - பெரிய - வலை என்பாருமுளர். அது பொருந்தாமையறிக.

**பன்றி - புலி - கரடி - யானை** - குறிஞ்சிநில விலங்குகள்.

**பார்வை** - பார்வை மிருகங்கள். வேடர் மிருகங்களைப் பிடித்துப் பழக்கிவைத்து அவற்றி னுதவிகொண்டு அவற்றினினங்களைப் பற்றுதற்குப் பயன்படுத்திக் கொள்வர். "மான் காட்டி மான் பிடிப்பதுபோல" என்றதொரு பழமொழி வழக்கும் இதினின் றெழுந்ததாம். இறைவன் அவ்வவுயிர்க்கும் அவ்வவையாய்த் தோன்றி அருள்புரிவன் என்ற ஞானசாத்திரக் கருத்துங் காண்க. "பார்வையென மாக்களைமுன்பற்றிப் பிடித்தற்காம் போர்வையெனக் காணார் புவி" என்பது திருவருட்பயன். **பார்வை** - என்றதற்கு மிருகங்களைப்போலச் செயற்கையாற் செய்யப்பட்ட மிருக உருவங்கள் என்பாருமுளர். அது பொருந்தாமையறிக. இதுபற்றி 672-ல் உரைத்தவை காண்க. பார்வை உள்ளன என்று வருவித்து முடித்துக்கொள்க.

**பாறை** - கற்பாறை. இவற்றையே குன்றவர் தமது குறிச்சியிலே முற்றங்களாக்கிக் கொள்வர். **ஐவனம்** - மலைநெல். இது குறிஞ்சித் திணையின் உணவுவகைகளில் ஒன்றாம். இந்நிலத்தவர்களின் உணவுவகைகளை உருசிபெறச் சமைத்துக் காட்டிய திறம் 683-684 பாட்டுக்களிற் காண்க.

**உணங்கும்** - உலரும். இந்நெல்லைச் சேமித்து வைத்துக்கொள்ளும் பொருட்டுப் பாறையில் உலர்த்தி எடுத்தல் மரபு.

**நாணன்** 738, 741, 745, 748, 750, 757, 764, 802. திண்ணனுருடன் கன்னி வேட்டைக்குச் சென்று அவரடிபிரியா விடலைகளாகி மெய்காவலாளரா யிருந்த இரு வரிலொருவன். நாகனுக்கும் மெய்காவலாளனுயிருந்து முதிர்ந்த அனுபவமும் அறிவு முடையவன்; திண்ணனுருடன் பன்றியைத் தொடர்ந்தோடியவன் ; இவனே திண்ண னரைக் காளத்தி மலைக்கு முன்சென்று வழிகாட்டி அழைத்துப்போய் அம்மலையின் காட்சி-ஐந்தோசை - குடுமித்தேவர்-அவரை வழிபடுமுறை முதலியவற்றை அறிவித்து வழிப்படுத்தி விட்டவன். மலைமேல் அவர் குடுமித்தேவரைப் பற்றிக்கொண்ட தன்மையை உடனிருந்து அறிந்து "வங்கினைப்பற்றிப் போகா வல்லுடும் பென்ன"த் "தேவுமால் கொண்டான்" என்று அதனைக்காடனுக்கு அறிவுறுத்தியவன். பின்னர் நாகனையும் தேவராட்டியையும் அழைத்து வந்து அறிந்தவகை யெல்லாம் பேதித்தும் தம்குறி வாராமையிற் கைவிட்டுப் போயினவன். நாண ! 750.

**நாயனர்** - 759. 722 - 817 - 824. தலைவர். யாவர்க்கும் தலைவராகிய சிவபெரு மானைக் குறிக்கும் இச்சொல் அவனடியார்களாய் உலகுக்குத் தலைவராய் உலகை ஆளுதற்குரிய பெரியோர்களைக் குறிக்க வழங்குவது சைவமரபு. நாயனீரே ! 774.

**நான்முகன்** - 828. இவர் ஐந்துமுகத்துடனிருந்தவர். அகந்தை கொண்ட போது பைரவமூர்த்தி ஒருமுகத்தைக் கிள்ளி விட்டதனல் நான்முகனுயினர். இறை வன் செய்த தண்டனையாதலாற் கிள்ளப்பட்ட தலையினைப் படைத்துக் கொள்ள வலியில ராயினர். தன்னல் படைக்கப்பட்ட திலோத்தமையின் அழகைக்காணும் பொருட்டு நான்குதிக்கிலும் நான்கு முகங்கள் கொண்டனர் என்ப. "அயனை அனங்கனை அந்தகனைச் சந்திரனை, வயனங்கண் மாயா வடுச்செய்தான் காணேடீ, நயனங்கள் மூன்றுடைய நாயகனே தண்டித்தாற், சயமன்றே வானவர்க்குத் தாழ்குழலாய் சாழலோ ?" என்றது திருவாசகம்.

**பராய்க்கடன்** - 659 - 680. தெய்வம் பரவிச் சடங்குடன் செய்யும் நேர்ச்சிக் கடன்முறை.

**பரிதி** - 778. சூரியன். நவக்கோள்களுள் ஒன்று இராசக்கிரகம் என்பர். "இருசுடர்" என்றவிடத் துரைத்தன பார்க்க. பகலவன் மலையிற்றாழ்ந்தான் 775. தேரிரவி எழும்போது 783. துணைபுரவித் தனித்தேர்மேற் றேன்றுவான் 808.

**பவித்திரமாஞ்செயல்** - 788. திருக்கோயிலில் அனுசிதம் நிகழ்ந்தால் அதனை மாற்றச் சிவாகமப்படி புனிதம் செய்யும் சடங்கு - மந்திரம் - பாவனைமுதலியவிதிகள்.

**புரங்கள்** - 650. திரிபுரம் எனப்படும். பொன் - வெள்ளி - செம்பு இவற்று லாகிய மதில்களையுடைய பறக்குமியல்புள்ள மூன்று நகரங்கள். இவற்றில் அசுரர்கள் வாழ்ந்து உலகை அலைத்தனர். இவற்றைச் சிவபெருமான் தமது புன்சிரிப்பினல் எரித்தனர். ஆனல் இவற்றுள் வாழ்ந்த சிவனடியார்களாகிய மூவர் (தாரகாட்சன் - கமலாட்சன் - வித்யுன்மாலி என்றவர்கள்) மட்டும் காப்பாற்றப்பட்டனர். அவர்களிரு வரே இறைவன் கோயில்வாயிற் காவலராவர். மற்றவர் திருக்கூத்திற்குக் குடமுழா முழக்குபவர். "மூவெயில் செற்ற ஞான்றுய்ந்த மூவரி லிருவர் நின்றிருக் கோயிலின் வாய்தல், காவ லாளரென் றேவிய பின்னை யொருவ னீகரி காடரங் காக, மாவை நோக்கியோர் மாநட மகிழ மணிமு ழாமுழக் கவ்வருள் செய்த, தேவ தேவ" என்பது நம்பிகளது (திருப்புன்கூர் (8) தக்கேசி) தேவாரம்.

**பொத்தப்பி** - நாயனர் அவதரித்த திருநாடு. சரித்திரக் குறிப்புப் பார்க்க.

**பொன் முகலி** - 743. காளத்தி மலையின் அடிவாரஞ்சேர வடக்கு நோக்கி ஓடும் ஆறு. தன்னுட் படிந்தார்க்கு உடற்றூய்மையும் உயிர்த் தூய்மையும் தந்து ஈடேற்றும் புண்ணிய நதி ; திருமுறைகளிற் போற்றப்பெற்றது. சரித ஆராய்ச்சிக் குறிப்புப் பார்க்க. திருமுகலி - 747, 787, 809. திருமுகலியாறு 763.

**மரக்கடை தீக்கோல்** 748 - 793. காய்ந்த மரக்கட்டையை மற்றோர் காய்ந்த மரத்தினுடன் விசையிற் கடைதலால் தீயினை உண்டாக்கும்படி முன்னாளில் வேடர்களுள் வழங்கியதொரு வழக்கு. தீக்கடையும் கோல். எரிகடையுமாணி 794.

**மலமூன்று** 803. **ஆணவம் - மாயை - கன்மமெனப்படும் பாசங்கள். ஆணவம்-** சகசமலம் - மூலமலம் எனப்படும். இது செம்பிற்களிம்புபோல அநாதியே உயிர்களின் அறிவு தொழில்களை மறைப்பது. **கன்மம்** - மூலகன்மம். முதலுற்பவத்தில் சூக்கும தேகம் பெறுதற் கேதுவாகியது. அகிலாண்டேசுவரி பதிகம் பார்க்க.

**மாயை** இருவினைப் பயனனுபவித்தற் பொருட்டுவரும் தநு கரண முதலியவற்றுக்கு முதற்காரணமாயிருப்பது. 803 உரைப்பகுதி பார்க்க.

**முருகவேள்** 659. குமார தெய்வம். குறிஞ்சிக்கடவுள். உடுப்பூரில் இவரது திருமுன்றலில் சேவலு மயிலும் விட்டும், தோரண மணிகள் தூக்கியும், மாலைகள் தொங்க வைத்தும், குரவைக் கூத்தொடு அணங்காடல்செய்தும்,பெருவிழா எடுத்ததன் பயனாக நாகன் திண்ணனாரை மகனாராகப் பெற்றான். இவர் முப்புரஞ்செற்ற சிவபெருமான் திருமைந்தர். மயில் ஊர்தியுடையவர். கிரவுஞ்சமலையைப் பிளந்த வெற்றியுடைய வேலேந்திய பெருமையுடையவர். சரிதமும் பிற சிறப்பும் கந்தபுராணத்துக் காண்க. இவரையே போற்றும் அருணகிரியார் திருப்புகழையும் ஓதியுய்க. போரணி நெடுவேலோன் 660. எந்தையார் மைந்தர் 661. வரையுரங் கிழித்ததிண்மை அயிலுடைத் தடக்கை வென்றி யண்ணலார் 661.மயிலுடைக் கொற்றவூர்தி 661.வென்றிவேள்678.

**மா எழுப்புதல்** 726. வேட்டைக் காட்டைச் சுற்றிலும் காவல் செய்தமைத்த பின் புதர் முதலிய மறைவிடங்களில் ஒளித்திருக்கும் விலங்குகளைப் பம்பை முதலிய இயங்கள் முழக்கியும், கை தட்டியும், வாயாற் கூவியும், மற்றும் பலவகை ஓசைசெய்தும், நாய்களை ஏவியும் அச்சுறுத்தி அவ்விடங்களிலிருந்து வெளிவரச் செய்தல்.

**முன்புசெய் தவம்** 751. முன்பிறப்பிற் செய்த தவம். இப்பிறப்பின் வரும் மேன்மைக்கு முன்பிறப்பின் றவம் காரணம் என்பர். 751 உரை பார்க்க. திண்ணனாரது தந்தை நாகனும் அவரை மகனாராகப்பெற முன்னைத்தவஞ் செய்தான். தவமுன் செய்தான் 657.

**மேரு** 681. மகாமேருமலை. பொன்மலை என்ப. இதனை நடுவைத்துச் சூரியன் முதலிய அண்டங்கள் சுற்றி வருவன என்பது மரபு. இதனைத் திரிபுர சங்கார காலத்தில் சிவபெருமான் வில்லாக வளைத்துக் கையிலேந்தினர் என்பன மாபுராணங்கள்.

**யாக்கைதன் பரிசு** 803. மாயேயங்களாகிய தநுவும் கரணங்களும். உரை பார்க்க.

**வரை ஆட்சி** 695. மலைவேடர்களின் தலைவனாக அவர்களை ஆளும் அரசுரிமை. பொருப்புரிமை 699.சிலைமலையர் குலக்காவல் 702.மரபுரிமை 702. குலத்தலைமை 703.

**வனதெய்வங்கள்** 700. காடுகளில் வாழும் சிறு தெய்வங்கள். இவை பலிகள் பெருமடை முதலியவற்றால் தம்மை வழிபட்டோரைக் காத்துச் சிறு நன்மைகள் செய்வன என்றும், வழிபடாவிடில் தீங்கு செய்வன என்றும் வேடர் நம்புவர். இவை மகிழப் பலியிடுவதனைக் " காடுபலி யூட்டுதல் " என்பர். காட்டிலுறை தெய்வங்கள் 697.

**வாளிதேர்தல்** 713. அம்புகள் வேட்டைக்குத் தகுதியாயுள்ள தன்மையைச் சோதித்தல்.

**வில் விழா** 680. விற்பயிற்சி தொடங்குதற்குச் செய்யும் விழா. சிலை விழா 685.

**விற் பிடித்தல்** 678. வில்விழாக் கொண்டாடி நல்லாசிரியன்பால் நல்வேளையில் வில்லைப்பிடித்துக் கலை பயிலத் தொடங்குதல். வித்தியாரம்பம் என்ப.

**வினையிரண்டு** 803. புனருற்பவத்துக் கேதுவாக உயிரான் ஈட்டப்பட்ட அறமும் பாவமும். உரை பார்க்க.

**வெறியாட்டு** 662. முருகப் பெருமானைக் குறித்து ஆடும் ஆடல் வகையுள் ஒன்று,

உ

திருச்சிற்றம்பலம்

# தலபுராணத்திரட்டு - துதிகள்

## சீகாளத்திப்புராணம் - (சிவப்பிரகாசர் - வேலையர் - கருணைப்பிரகாசர்)

### தலவிநாயகர்

*தருமஞ் சந்திகழ் தாமரை யோன்பதங்*
*கருமஞ் சந்தி கடுப்பவர் வாழ்பதங்*
*அருமஞ் சந்திரற் றேய்திருக் காளத்தி*
*வருமஞ் சந்தி மழைமத யானையே.*

### திருக்காளத்திநாதர்

*நீர்கொண்ட பொலம்பூங் கொன்றை நெடுஞ்சடை வனத்து டுத்த*
*சீர்கொண்ட புலித்தோற் கஞ்சிச் சென்றுபுக் கொளிப்பத் தாவு*
*மேர்கொண்ட வுழையி ளங்கன் றிலங்கிய திருக்க ரத்துக்*
*கார்கொண்ட பொழிற்கா ளத்திக் கடவுளை வணக்கஞ் செய்வாம்.*

### ஞானப்பூங்கோதையம்மையார்

*பூமக ளிறைஞ்ச நெற்றிப் புதுமணித் திலகந் தோய்ந்து*
*தாமரை நகுமு கத்தோர் தான்பெறப் பணிக ளங்க*
*மாமதி புரையு மங்கேழ் வயங்குகிர் மலர்த்தாட் குன்றக்*
*கோமக ளருண்ஞா னப்பூங் கோதையை வணக்கஞ் செய்வாம்.*

### முருகப்பெருமான்

*வளர்செழுஞ் சுருதிச் சூட்டு வாரணம் வலனு யர்த்த*
*வொளிகெழு பரிதி வைவே லொருபெருங் கருணை மூர்த்தி*
*களிமகிழ் சிறந்து தான்வாழ் கற்களி ஞெருகல் லென்றே*
*வளியவென் மனத்தி னுள்ளு மகன்றில னிருக்கு மன்னே.*

## திருக்காளத்திப் புராணம் - (ஆனந்தக் கூத்தர்)

### ஞானப்பூங்கோதையம்மையார்

*கானப்பூங் குழல்போற்றி ; கருணைபொழி விழிபோற்றி ;*
*தானப்பூங் களபமுலை தாங்கிநுடங் கிடைபோற்றி ;*
*வானப்பூந் தருமகவான் வணங்குதிருக் காளத்தி*
*ஞானப்பூங் கோதையுமை நற்கமல பதம்போற்றி.*

### கண்ணப்ப நாயனர்

*மண்ணிடந்து மணிவண்ணன் மருவருஞ்சே வடியார்க்கு*
*விண்ணிடந்து மறைக்கிழவன் விரவரும்பொன் முடியார்க்குக்*
*கண்ணிடந்து சாத்தியிரு கண்ணுக்குக் கண்மூன்று*
*பெண்ணிடங்கொண் டவரருளாற் பெற்றவர்தாள் பெற்றிடுவாம்.*

### வாழ்த்து

*வாழி யேதிருக் காளத்தி வானவன் ;*
*வாழி யேயவன் வாமத்தில் வாணுதல் ;*
*வாழி மைந்தர்கள் ; வாழி யடியவர் ;*
*வாழி வைதிக சைவ மரபெலாம் ;*

திருச்சிற்றம்பலம்.